## ஏமாற்ற முடியாது !

இந்தப் புத்தகத்தை வாங்காமல் நீங்கள் என்னை ஏமாற்ற முடியாது !

அவ்வப்பொழுது நான் பத்திரிகைகளில் எழுதும் கட்டுரைகளைச் சேர்த்து பைண்டு பண்ணி வைத்துக் கொண்டு, பின்னால் நான் அவற்றைத் தொகுத்து வெளியிடும்போது வாங்காமல் எனக்கு நாமம் போடுவது என்று என் "அன்பர்கள்" சிலர் ஆரம்பித்திருக்கின்றனர்.

ஆனால் அந்த "பாச்சா" இந்தப் புத்தகத்தின் விஷயத்தில் பலிக்காது. ஏனெனில் இதை நான் ஒரு தனிப் புத்தகமாகவே எழுதி வெளியிட்டு விட்டேன். இதில் கண்ட விஷயங்கள் ஒரு பத்திரிகையிலும் வெளிவந்ததில்லை.

......என்ன ஆச்சரியப்படுகிறீர்கள் ? தனிப் புத்தகம் எழுதும் அத்தனை பொறுமையும் சாவகாசமும் எனக்கு எப்படிக் கிடைத்தது என்றுதானே கேட்கிறீர்கள் ?

நான் எவ்வளவு எக்கச்சக்கமான நிலைமையில்—புத்தகம் எழுதுவதைத் தவிர வேறு வழியில் ஜனங்களை உபத்திரவப்படுத்த முடியாத நிலைமையில்—அகப்பட்டுக் கொண்டு விழித்தேன் என்பது தெரிந்தால் நீங்கள் இப்படி ஆச்சரியப்படமாட்டீர்கள்.

காலில் அம்மிக்கல்லைப் போட்டு எலும்பை முறித்துக் கொண்டு, அந்த உபத்திரவம் போதாதென்று "பிளாஸ்டர் கேஸிங்" வேறு போட்டுக் காலைக் கட்டிக்கொண்டு, ஒரு இடத்துக்கும் போக முடியாமல் வீட்டிலேயே அடைபட்டுக் கிடந்தால் புத்தகம் எழுதுவதைத் தவிர வேறு

எந்த வழியில் பொது ஜனங்களை ஹிம்சிக்க முடியும் கேட்கிறேன்!

......என்ன கேட்கிறீர்கள்?......இதோ பாருங்கள். அம்மிக்கல் எப்படி விழுந்தது, என்ன சமாசாரம், அம்மிக் கல் பக்கம் நான் போகவேண்டிய அவசியமென்ன என் றெல்லாம் கேட்டு என் மானத்தை வாங்கினீர்களோ எனக்குக் கெட்ட கோபம் வந்து விடும்! இது நிற்க.

இதைவிட பெரிய பெரிய புத்தகங்கள், சமயத்துக் குத் தலையணையாக உபயோகிக்கக்கூடிய புத்தகங்கள், எழுத வேண்டுமென்று வெகு நாளாக முயன்று பார்க் கிறேன். ஆனால் ஒரு ஆட்டுக்கல்லின் உதவியின்றி அது முடியாதுபோல் தோன்றுகிறது. ஆனால் அம்மிக்கல் வாங்கிப்போட்ட வீட்டுக்காரர் ஆட்டுக்கல் வாங்கிப் போட்டால்தானே?

தியாகராயநகர்,<br>8-1-46

நாடோடி

# பொருளடக்கம்

## நாடோடி எழுதிய நூல்கள்

நாடகமே உலகம்

பிழைக்கும் வழி

இதுவும் ஒரு பிரகிருதி

ஒரு நாள் கூத்து

அட பரமசிவா!

எங்கள் குடும்பம் பெரிது

படித்த பெண் வேண்டாம்

ஹே, அனுராதா!

என்னைக் கேளுங்கோன்னா (அச்சில்)

புருஷர்களுக்கு மட்டும் (அச்சில்)

உலகம் பலவிதம் (அச்சில்)

## ஆரம்பம்

**பு**ஸ்தகத்தின் தலைப்பைப் பார்த்து ஏதோ பணம் சம்பாதிக்கும் வழிதான் சொல்லி யிருக்கிறேனே என்று நேயர்கள் நினைக்கக் கூடும். அப்படி நினைத்தீர்களானால் அதைப் போல ஏமாற்றம் வேறு ஒன்றும் கிடையாது. பணம் சம்பாதிக்க வழி தெரிந்தால் நான் ஏன் இப்படிப் பேனாவைக் கட்டிக் கொண்டு அழுகிறேன்?

பணம் சம்பாதிக்க வழி தெரிய வேண்டுமானால், அதற்கு என்னிடம் வந்து பிரயோசனமில்லை. "நாள் ஒன்றுக்கு நாற்பது ரூபாய் சம்பாதியுங்கள், ஒழிந்த வேளையில் ஓராயிரம் ரூபாய் சம்பாதியுங்கள்" என்றெல்லாம் பத்திரிகைகளில் விளம்பரம் செய்கிறார்களே, அவர்களைப் பிடியுங்கள். ஆனால் "ஒழிந்த வேளையில்" ஓராயிரம் ரூபாய் சம்பாதிக்கத் தெரிந்தவர்கள் தாங்களே அந்த வழியைக் கையாண்டு பணம் சம்பாதிக்காமல், ஏன் பிறருக்கு உபதேசம் பண்ண வந்து விடுகிறார்கள் என்பதுதான் எனக்கு இன்னும் விளங்கவில்லை. ஒரு வேளை அவர்களுக்கு ஒழிவே ஏற்பட வில்லையோ, என்னமோ!

"பிழைக்கும் வழி" என்று நான் குறிப்பிடுவது வாழ்க்கையில் சாமர்த்தியமாக, "நானு

பேருக்கு நல்லவ"னக நடந்து கொள்வதைப் பற்றித் தான்.

புஸ்தகம் எழுதுகிறவர்கள், வழக்கமாக ஒரு பொய் சொல்லுவ துண்டு. தாங்கள் எழுதி யுள்ள விஷயத்தைப் பற்றி அது வரை சரியானபடி நல்ல புஸ்தகங்கள் எழுதப் படவில்லை யென்றும், தங்களுடைய சிநேகிதர்கள் எல்லாம் ஒன்று திரண்டு, முற்றுகை யிட்டு, "இந்தக் குறையை நீங்கள் தான் நிவர்த்தி செய்யவேண்டும், இல்லாவிடில் உலகமே அஸ்தமித்து விடும்" என்று தங்களுடைய முக வாய்க் கட்டையைப் பிடித்துக் கெஞ்சினர்களென்றும், சிநேகிதர்களின் வற்புறுத்தல்களைப் பொறுக்க மாட்டாமல் திணறிப் போய்த் தாங்கள் புஸ்தகம் எழுதத் துணிந்ததாகவும் "கப்ஸா" அடிப்பதுண்டு.

ஆனல் இந்தப் புஸ்தகம் விஷயமாக என்னமோ, நம்பினல் நம்புங்கள், நம்பா விட்டால் போங்கள், இதில் பாதி உண்மை. அதாவது முதல் பாதி உண்மை என்று துணிந்து கூறுவேன். இது வரை இது விஷயமாகப் புஸ்தகம் வெளி வரவில்லை. நேயர்கள் இதை நம்ப மறுக்கலாம். புலி வந்த கதையில், நிஜமாகவே புலி வந்தும், ஜனங்கள் நம்ப மறுத்தார்கள் அல்லவா? அதைப் போல.

கல்லூரிகளில் மாணவர்களுக்கு என்னென்னவோ சொல்லிக் கொடுக்கிறார்கள். நடக்காத விஷயங்களை நடந்ததாக வைத்துக் கொண்டு பாட புஸ்தகங்கள் தயாரிக்கிறார்கள். இருக்கிற விஷ

யத்தை இல்லாததாக வைத்துக் கொண்டு "நோட்ஸ்" கொடுக்கிறார்கள். போகாத ஊருக்கு வழி சொல்லிக் கொடுக்கிறார்கள். நடக்காத காரி யத்தைப் பற்றி நாள் கணக்கில் பேசுகிறார்கள். ஆனால் வாழ்க்கையில் எந்த விஷயம் மாணவர் களுக்கு வெகு முக்கியமோ அதைப் பற்றி ஒன்றும் சொல்லிக் கொடுப்பதில்லை. வாழ்க்கையில் பிழைக் கும் வழியைப் பற்றி ஒரு அட்சரம் கூடச் சொல்லிக் கொடுப்பதில்லை. பிழைக்கும் வழி பள்ளிக்கூட உபாத்தியாயர்களுக்கே தெரியுமோ, என்னமோ!

ஊர் விட்டு ஊர் செல்வதற்கு மோட்டார் ஓட்டி களுக்குக் கூட படங்கள் இருக்கின்றன. அங்கங்கே வழி காட்டி மரங்களும், மைல் கற்களும் இருக்கின் றன. வழி காட்டி மரம் இல்லாத இடத்தில் போலீஸ்காரன் மரம் போல் நின்று கொண்டு கை காட்டிக் கொண்டிருக்கிறான்.

ஆனால் வாழ்க்கை யென்னும் கரடு முரடான பாதையில் செல்லுகிறவர்களுக்கு வழி காட்டிகளும் கிடையாது, கை காட்டிகளும் கிடையாது; அதைப் பற்றிய புஸ்தகங்களும் கிடையாது.

வானத்தை வில்லாக வளைத்து, மணலைக் கயிறாகத் திரித்து, மலையை அம்பாகத் தொடுப் பதைப் பற்றி புஸ்தகங்கள் மலிந்து கிடக்கின்றன. ஆனால் அடுத்த வீட்டு அண்ணுசாமி அய்யருடன் எப்படிப் பழகுவது என்பதைப் பற்றியோ, அல் லது, குட்டி போட்ட பூனை போல், மாதத்துக்கொரு தடவை சட்டி தூக்காமலும், வீட்டுக் காரருடன்

விரோதம் இல்லாமலும் குடித்தனம் பண்ணுவது எப்படி என்பதைப் பற்றியோ புஸ்தகங்கள் கிடையாது.

இக் குறையை நிவர்த்திப்பதே இப் புஸ்தகத்தின் நோக்கம். ஆனால் நம் ஜனங்கள் இது மாதிரி விஷயங்களில் எவ்வளவு அசிரத்தையாக இருக்கிறார்கள் என்று நினைத்துப் பார்க்கும் போது எனக்கு அழுகை, அழுகையாக வருகிறது. (யாரங்கே! என் கைக் குட்டையை எடுத்துக் கொண்டு வா!) எனக்கு எத்தனையோ நண்பர்கள் இருக்கிறார்களே, அவர்களில் ஒருவராவது, "நீ இத்தகைய புஸ்தகம் எழுதித் தான் ஆகவேண்டும், இல்லாவிடில் உலகம் அஸ்தமித்து விடும்" என்று என் முகவாய்க் கட்டையைப் பிடித்துக் கெஞ்சக் கூடாது? கிடையாது. பரவாயில்லை. "சொல்லாமல் செய்வோர் பெரியோர்!" அல்லவா?

கடைசியாக ஒரு வார்த்தை. அது நீங்கள் என்னைக் கேட்கக் கூடிய வார்த்தை தான். "ஐயா, பிறருக்குப் பிழைக்கும் வழி உபதேசம் பண்ணப் புறப்பட்டு விட்டீர்களே, உங்களுக்கு அந்த வழி தெரியுமோ?" என்று நீங்கள் கேட்கலாம்.

இது சுத்த அசட்டுக் கேள்வி. ஏனெனில், அவரவர்கள் தங்கள் தங்களுக்குத் தெரிந்த விஷயங்களைப் பற்றித்தான் எழுதவேண்டும், தாங்கள் நடைமுறையில் அனுஷ்டித்துப் பயன் கண்ட உண்மைகளைத் தான் பிறருக்கு எடுத் துரைக்கவேண்டும் என்று சொல்வ தெல்லாம் பழங் காலம், ஜன

நாயகம் இல்லாமல் செங்கோல் மன்னர்கள் கொடுங் கோல் ஆட்சி புரிந்து வந்த காலம்.

இப்பொழுதோ ஜனநாயகம் ஆட்சி செலுத்து கிறது....என்ன சந்தேகப் படுகிறீர்கள்? அப்படித் தான் பிரிட்டிஷார் கூறுகிறார்கள். அதற்காகத் தான் யுத்தம் நடத்தினதாகவும் கூறுகிறார்கள். இந்தியத் தற்காப்புச் சட்டத்தின் வரம்பைத் தாண் டாத வரையில் யார் வேண்டுமானாலும் எதைப் பற்றி யும், என்ன வேண்டுமானாலும் எழுதலாம்.

சமையல் வித்வான் சங்கீத வித்வான்களைப் பற்றி எழுதலாம். சங்கீத வித்வான்கள் நம் அரசி யல் முறையைப் பற்றி அதிகப் பிரசங்கம் புரியலாம். நம் அரசியல் தலைவர்கள் சமையல் சாஸ்திரத்தைப் பற்றி நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டே புஸ்தகம், புஸ்தகமாக எழுதிக் குவிக்கலாம். தடுப் பதற்கு யாரு மில்லை.

இந்த ரீதியில் தான் நானும் இந்தப் புஸ்தகம் எழுதத் தொடங்கினேன். பிழைக்கும் வழி எனக் குத் தெரியாது. தற்காலத்தில் தெரியாத விஷயங் களைப் பற்றிப் பிறருக்கு எடுத்துச் சொல்வது தான் மிக எளிதாகக் காணப்படுகிறது. அந்த முறையில் இதோ எழுதத் தொடங்கி விட்டேன். எல்லோரும் பிழைக்கும் வழி தெரிந்து பிழைத்துப் போங்கள்!

---

## அஸ்திவாரம்

பிழைக்கத் தெரிந்தவன் யாரைப் போல் இருப்பான் என்று சொல்வதைக் காட்டிலும் யாரைப் போல் இருக்கமாட்டான் என்று கூறுவது எளிது. பிழைக்கத் தெரிந்தவன் சத்திய அரிச் சந்திரனைப் போல் இருக்க மாட்டான். ஏனெனில் பிழைக்கும் வழிக்கே அஸ்திவாரமாயும் முதல் படியாயும் இருப்பது பொய் சொல்லத் தெரிவது தான்.

இதைக் கேட்டதும், "பூ, இவ்வளவு தானே, இதை நீங்கள் எங்களுக்குச் சொல்லித் தரவே வேண்டியதில்லை. மீன் குட்டிக்கு நீந்தக் கற்றுக் கொடுக்க வேண்டுமா, என்ன?" என்று அநேகர் கூறலாம். அப்படித் தாங்களே நீந்தக் கற்றுக் கொண்ட "மீன் குட்டிகள்" இந்த அத்தியாயத் தைப் படிக்கத் தேவை இல்லை; அடுத்த அத்தி யாயத்துக்குச் சென்று விடலாம்.

ஆனால், எல்லோருமே இதில் கெட்டிக்காரர் களாயிருக்க முடியாது. அந்தப் பொல்லாத அரிச் சந்திரன் சரித்திரமும், பள்ளிக்கூடப் பாட புஸ்த கங்களும் சேர்ந்து எத்தனையோ பேரை அசடாக்கி விட்டன. பொய் சொல்லுவ தென்றால் ஏதோ தங்கள் மேல் காய்த்துத் தொங்குவது போல் பயப் படுகிறவர்களும் இன்று பலர் இருக்கின்றனர்.

இதற்கு இந்தப் பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் தான் வெகு முக்கிய காரணம் என்று கூறுவேன். தான் கெட்டது போதாது என்று சந்திர புஷ்கரணியையும் சேர்த்துக் கெடுத்ததாம் என்று சொல்வார்களே, அதைப் போல இந்த உபாத்தியாயர்கள் தாங்கள் உண்மை சொல்லிக் கெட்டது போதாது என்று தங்கள் மாணவர்களையும் உண்மை சொல்லும்படி வற்புறுத்திக் கெட வைக்கிறார்கள்.

நான் அடிக்கடி சிறுவர்கள் படிக்கும் பாடசாலைகளைப் போய்ப் பார்வை யிடுவதுண்டு. பாடசாலைகளைப் பார்வை யிடுவதில் எனக்குள்ள ஆர்வத்தைப் பார்க்கும் போது பள்ளிக்கூட இன்ஸ்பெக்டராய்ப் போயிருக்கலாம் என்று தோன்றுகிறது. அப்படி பார்வை யிடும் காலத்தில், "உண்மை பேசு" என்று பள்ளிக்கூடச் சுவரில் எழுதப் பட்டிருக்கும் வார்த்தைகளைப் பார்க்கும் போதெல்லாம் எனக்குப் பழைய மூக்கறுபட்டவன் கதை தான் ஞாபகத்துக்கு வரும்.

மூக்கறுபட்டவன் கதை உங்கள் எல்லோருக்கும் ஞாபகம் இருக்கு மென்று நம்புகிறேன். ஒரு அசட்டுப் பேர்வழி பகவானை நேரிலேயே தரிசிக்க வேண்டு மென்று, வெகு காலமாக ஆவலாக இருந்தான். அந்த ஊரில் ஒரு போக்கிரி இருந்தான். போக்கிரி இல்லாத ஊர் ஏது? அவன் இந்த அசட்டுப் பேர்வழியைப் பார்த்து, "நீ உன் மூக்கை அறுத்துக் கொண்டால் சுவாமி உனக்கு உடனே

காட்சி அளிப்பார்'' என்று சொன்னான். அசட்டுப் பேர்வழி உண்மையிலேயே அசடாகையால், "உனக்கு எப்படித் தெரியும்! நீ மூக்கை அறுத்துக் கொண்டு பார்த்தாயா?'' என்று கேட்க வில்லை. அந்த போக்கிரி சொன்னது நிஜம் என்றே நம்பி, மூக்கை அறுத்துக் கொண்டான். ஆனால் சுவாமி யையும் காணோம், பூதத்தையும் காணோம்! "ஐயையோ! இப்படி ஏமாந்து போய் விட்டோமே" என்று இருந்தது அந்த அசட்டுப் பேர்வழிக்கு. ஆனால் மறுகணமே அசட்டுப் பேர்வழி, சமர்த்துப் பேர்வழி யாகி விட்டான்.

மூக்கறு பட்டாலே புத்தி சாலித்தனம் வந்து விடுமோ, என்னமோ, தெரியவில்லை. இந்தச் சூர்ப் பனகை விஷயத்தைத் தான் எடுத்துக் கொள்ளுங் களேன்! ராம லக்ஷ்மணர்கள் மீது காதல் கொண்டு தானே அவள் பஞ்சவடிக்குச் செல்லுகிறாள்? ஆனால் லக்ஷ்மணன் கையால் மூக்கறு பட்டதும் அவள் புத்தி எவ்வளவு தீட்சண்யப்பட்டு விடுகிறது? அவள் கற்பனா சக்தி எவ்வளவு உயரத்துக்குப் பறக் கிறது? தன் அண்ணனாகிய ராவணனிடம் சென்று தான் ராம லக்ஷ்மணர்களைக் காதலித்த தாகவா சொல்லுகிறாள்? சீதையை அவனுக்காக எடுத்துக் கொண்டு வரப் பிரயத்தனப் பட்டதாக வல்லவோ சொல்லுகிறாள்! மூக்கறு பட்டதால் புத்தி சாதுரியம் எவ்வளவு ஏற்படுகிறது பார்த்தீர்களா?

விஞ்ஞானிகள் மலிந்து கிடக்கும் தற்காலத் தில், யாராவது ஒரு விஞ்ஞானி இந்த மாதிரியான

நல்ல விஷயத்தைப் பரிசோதனை செய்து பார்க்க வேண்டுமே? அது தான் கிடையாது. பழைய காலத்தில் விஞ்ஞானிகள் விஞ்ஞானத்துக்காகத் தங்கள் உயிரையும் கொடுக்கத் தயாராயிருந்தார்கள். ஆனால் இந்தக் காலத்திலோ, விஞ்ஞானத்துக்காக யாராவது ஒரு விஞ்ஞானி தம் சிறு மூக்கைத் தியாகம் செய்தார் என்று கேள்விப் படுகிறோமோ? கிடையாது. என்னே விஞ்ஞானிகளின் அஞ்ஞானம்!

என்னவோ சொல்லிக் கொண்டிருந்தவன் எங்கேயோ போய் விட்டேனே!..........ஆமாம், என்ன சொல்லிக் கொண்டிருந்தேன்?............. ஆம், அந்த அசட்டுப் பேர்வழி மறு கணமே சமர்த்துப் பேர்வழி யாகி விட்டான். "அரஹர, சிவ, சிவா! சம்போ! மகாதேவா!" என்றெல்லாம் கன்னத்தில் போட்டுக் கொள்ளத் தொடங்கினான். "அதோ, பகவான் பிரத்தியட்சமாகி விட்டார்!" என்று கூத்தாடத் தொடங்கினான். இதைப் பக்கத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்த போக்கிரிப் பேர்வழி, இதை நிஜம் என்று நம்பி தானும் தன் மூக்கை யறுத்துக் கொண்டான். ஆனால் சுவாமியையும் காணவில்லை, பூதத்தையும் காணவில்லை. அசட்டுப் பேர்வழி தன்னை ஏமாற்றி விட்டான் என்று கண்டு கொண்டான். இருந்தாலும் குட்டை வெளிப் படுத்தலாமா? அதனால் இவனும் தான் சுவாமியைப் பார்த்து விட்டவன் போல் ஆனந்தக் கூத்தாடத் தொடங்கினான். பிறகு இவர்களைப்

பார்த்து விட்டு, ஊரார் முழுவதும், மூக்கை யறுத்துக் கொண்டனர் என்பது கதை.

அதைப் போலத் தான் இருக்கிறது இந்தப் பள்ளிக்கூட உபாத்தியாயர்களின் காரியமும். நிஜம் சொல்லி, நிஜம் சொல்லி, தாங்கள் வாழ்க்கையில் குட்டிச் சுவராய்ப் போனது போதாது என்று, தங்கள் மாணவர்களையும் நிஜம் சொல்லும்படி வற்புறுத்துகிறார்கள்.

இந்தக் கலிகாலத்தில் வாத்தியார் சொல்படி கேட்கிற அச்சுப் பிச்சுகளும் சிலர் இருக்கிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

---

# வாதமும், பிரதி வாதமும்

**பொய்** சொல்லக் கூடாது என்பதற்கு இந்த அச்சுப் பிச்சுகள் சொல்லக் கூடிய வாதங்கள் இரண்டே இரண்டு தான்.

முதல் வாதம், "ஐயோ, பொய் சொல்வது பாவம்" என்பது.

இதற்கு நான் சொல்லும் பதில் இது தான். அவரவர்கள் தங்கள், தங்கள் காரியத்தைப் பார்த்துக் கொண்டு, மாட மாளிகைகளையும், கூட கோபுரங்களையும் கட்டிக் கொண்டு, தெருவில் பாத சாரிகள் நடுங்கும்படி 'ஹார்ன்' செய்யும் மோட்டார் வாகனங்களில் செல்லுவதற்காகப் பிறந்திருக்கிறார்களா, அல்லது உலகத்தை உத்தாரணம் பண்ணுவதற்குப் பிறந்திருக்கிறார்களா என்று கேட்பது தான்.

உலகத்தை உத்தாரணம் பண்ணுவதற்காகவா நாமெல்லாரும் பிறந்திருக்கிறோம்? நாமெல்லாரும் இந்தக் காரியத்தை மேற் கொண்டு விட்டால் காந்தி போன்ற பெரியோர்களுக்குத் தான் என்ன வேலை, கடவுளுக்கே தான் என்ன வேலை, கேட்கிறேன்!

நாமெல்லாரும் சத்திய சந்தர்களாகி விட்டால் சத்திய விரதத்தைக் கடைப் பிடித்து நடக்கும் காந்திக்கு எங்கே சிறப்பு ஏற்படப் போகிறது? மகாத்மா என்று தான் அவருக்கு எப்படிப் பட்டம்

ஏற்படப் போகிறது? காந்தி போன்ற பெரியோர் கள் நம் நாட்டில் இருக்கிறார்கள் என்று அவர் களின் சிறப்பை எடுத்துக் காட்டுவதற் காகவாவது நாமெல்லாரும் பொய் சொல்ல வேண்டாமா?

நாமெல்லாரும் நிஜம் சொல்ல ஆரம்பித்தால் கடவுள் கூடத் திண்டாடிப் போய் விடுவார் என் பதில் சந்தேக மில்லை. தேவலோகத்தை விட்டு விட்டுப் பூலோகத்துக்கு ஓடி வருவதில் பகவானுக்கு மிக இஷ்டம். அடிக்கடி, ஒரு காரணமுமின்றி வந்தால், யாராவது குறை கூறக் கூடுமல்லவா? அதற்காக எப்பொழுது பூலோகத்தில் அதர்மம் ஓங்கி நிற்கிறதோ, அப்பொழுது வருகிறேன் என்று கூறி யிருக்கிறார். ஆகவே நாம் எவ்வளவுக் கெவ் வளவு உலகில் அதர்மம் ஓங்கி வளரச் செய்கி றோமோ, அவ்வளவுக் கவ்வளவு பகவத் பிரீதிக்கு ஆளாவோம் என்பதில் சந்தேக மில்லை. எல்லாரும் சத்தியம் சொல்ல ஆரம்பித்து விட்டால், அதர்மம் ஓங்குவதற்கு வழி ஏது? ஆகவே கடவுளுக்கு ஏற்படக் கூடிய திண்டாட்டத்தை உத்தேசித்தாவது நாம் உண்மை சொல்லக்கூடாது என்று ஏற்படு கிறது.

இந்த அச்சுப் பிச்சுகள் சொல்லும் இரண்டா வது வாதம், "சத்தியம் ஒரு அழகிய விலை உயர்ந்த ஆபரணம். இந்த ஆபரணத்தை நாம் ஏன் அணிந்து கொள்ளக் கூடாது" என்பதாகும்.

ஆம், சத்தியம் மிகவும் விலை உயர்ந்த பொருள் தான்! நான் இல்லை யென்று சொல்லவில்லை.

ஆனால் இதைப் போலவே தான் வைரம், வைடூரியம் முதலியவையும் விலை உயர்ந்த பொருள்கள். வைரம், வைடூரியம் முதலியவற்றால் இழைத்த நகைகள் பார்க்க மிகவும் அழகாகத்தான் இருக்கின்றன. போட்டுக் கொண்டால் நான்கு பேர் நம்மைக் கண்டு அசூயைப் படத்தான் செய்வார்கள்.

இதற்காக எல்லாருமே வைர நகைகள் அணிந்து கொள்ள முடியுமா, என்ன? முடியாது. எல்லாருக்கும் வைர நகைகள் அணிந்து கொள்வது கட்டி வருமா, என்ன? வராது.

அதைப் போலத்தான் உண்மை பேசுவதும். ஒன்றிரண்டு பேர்கள், அதாவது மிகவும் செல்வாக்கு உள்ள பேர்கள், அரிச்சந்திரனைப் போன்று அரசு புரிந்த பேர்கள், (இதில் கூடப் பார்த்தீர்களா? நம் முன்னோர்கள் அரிச்சந்திரன் போன்ற அரசன் உண்மை சொன்னான் என்று உதாரணமாகச் சொன்னார்களே யொழிய, நம் போன்ற சாதாரண மக்களை உதாரணமாக எடுத்துக் காட்டினார்களா? கிடையாது.) இவர்களுக்கு வேண்டுமானால் உண்மை என்னும் விலை உயர்ந்த பொருள் கட்டிவரும். நம் போன்ற சாதாரண ஜனங்களுக்குக் கட்டி வராது. பணக்காரர்கள் விலை உயர்ந்த வைர நகைகள் அணிந்து கொண்டால் நாம் ரங்கூன் வைரம் போன்ற போலி வைரத்துடன் திருப்தி யடைய வேண்டியது தானே?

இதில் இன்னொரு விஷயம் இருக்கிறது. வைர நகைகள் விஷயத்தில் கூட இந்த வேடிக்கையை

நீங்கள் கண்டிருக்கலாம். பணக்காரர்கள் போலி வைர நகைகள் அணிந்து கொண்டிருந்தாலும் ஜனங்கள் அதை நிஜ வைரம் என்று தான் சொல் வார்கள்; ஏழைகள் எப்படியோ கஷ்டப் பட்டு, வயிற்றைக் கட்டி, வாயைக் கட்டி மிக விலை உயர்ந்த வைரமே வாங்கி அணிந்தாலும், ஜனங்கள் நம்ப மாட்டார்கள். ஆகவே சாதாரண ஜனங்கள் உண்மை சொல்லியும் பிரயோசன மில்லை. ஜனங் கள் அதை நம்ப மாட்டார்கள்.

நான் சொல்லும் வார்த்தையில் உங்களுக்குச் சந்தேகமா யிருந்தால், இதோ, அடுத்த அத்தியாயத் தில் உள்ள கதையைப் படியுங்கள்.



## கதை ஆரம்பிக்கிறது

முன்னொரு காலத்தில், நம் நாட்டில் மோகரா என்று சொல்லப்படும் தங்க நாணயங்கள் வழங்கிக் கொண்டிருந்த காலத்தில், நாணய சாலையில் ஒரு தவறு நேர்ந்து விட்டது. எப்போதுமே வெறும் தங்கத்தை நாணயமாக அச்சிடுவதில்லை. அத்துடன் வேறு உலோகத்தையும் கலந்து தான் அச்சிடுவார்கள். ஆனால் ஒரு சமயம் நூறு தங்க நாணயங்கள் வேறு உலோகத்தின் கலப்பில்லாமலே நாணய சாலையை விட்டு வெளி உலகத்துக்குச் சென்று விட்டன.

இந்த நாணயங்களில் ஒன்று ஒரு குடியானவன் கைக்கு வந்து சேர்ந்தது. குடியானவன் வெகு காலமாகவே நல்ல கம்பளி யொன்று வாங்க வேண்டும் என்று மிகுந்த ஆசையுடன் இருந்தான். ஆகவே அந்த மோகராவை எடுத்துக் கொண்டு கடைக்குச் சென்றான்.

கடையில் விதம் விதமான கம்பளிகள் இருந்தன. அவற்றில் தனக்குப் பிடித்தமான தொன்றைப் பொறுக்கி குடியானவன் பேரம் பேச ஆரம்பித்தான்.

பேரம் பேசும் வழக்கம் நம் நாட்டில் வெகு காலமாகவே இருந்து வருகிறது என்னும் விஷயம் உங்களுக்குத் தெரிந் திருக்கலாம். தற்காலத்தில், ஆங்கில நாகரிகம் முற்ற, முற்ற இந்த பேரம்

பேசும் வழக்கம் மறைந்து கொண்டே வருகிறது. கல்யாணத்திற்கு முன்னர்,பின்னால் சம்பந்திகளாகப் போகிறவர்கள் வரதட்சிணை விஷயமாகப் பேரம் பேசுகிறார்களே, அது ஒன்று தான் தற்காலத்தில் இப் புராதனக் கலையின் தனிப் பெரும் சின்னமாக எஞ்சி நிற்கிறது. ஆங்கிலேயர்களின் உறவால் நம் பழைய நாகரிகம் எல்லாம் அழிந்து, சிதைந்து விட்டது என்பதற்கு சாட்சி இப்புராதனக் கலை அழிந்து விட்டது ஒன்றே போதும்.

என்ன சொன்னேன்? இதைக் கலையென்றா சொன்னேன்? ஆமாம், சந்தேகமில்லை, இது ஒரு கலை தான்.

ஏனெனில் பேரம் பேசுவதற்கு அலாதி சாமர்த்தியமும் திறமையும் வேண்டும். இக் கலையில் நல்ல தேர்ச்சியும் அனுபவமும் உள்ளவர்களை அடுத்து, இதில் உள்ள அநேக நுட்பங்களையும், நுணுக்கங்களையும் கற்று, வெகு காலம் அப்பியசித்தால் தான் இவை ஏற்படும்.

தற்காலத்தில் பல சாமான்களின் விலையை சர்க்காரே கட்டுப் படுத்தி விட்டார்கள். ஆகவே எந்தக் கடைக்குப் போனாலும் ஒரே விலை தான். கடைக்காரனைப் பார்த்து என்ன விலை என்று கேட்க வேண்டிய அவசியம்கூட இல்லை. அதனதன் விலையை அதனதன் தலையில் எழுதி ஒட்டி விடுகிறார்கள்.

இதனால் கடைக்குப் போய் சாமான்கள் வாங்குவதில் 'குஷி' ஒன்றும் இல்லை. நம் சாமர்த்தியத்

தைக் காட்டுவதற்குச் சந்தர்ப்பம் கிடைக்காமற் போய் விடுகிறது. ஏதோ, "காசிக்குப் போனேன், காவடி கொணர்ந்தேன்" என்பது போல் இருக் கிறது, தற்காலத்திய "ஷாப்பிங்." இந்த ரீதியில் போனல் இன்னும் கொஞ்ச காலத்துக்குள் பிளாட் பாரம் டிக்கட் வாங்குவதற்கு உள்ளது போன்ற யந்திரக் கருவிகள் ஒவ்வொரு சாமானுக்கும் வந்து விட்டாலும் ஆச்சரியப் படுவதற் கில்லை. அப்பொ ழுது கடைக்காரன் என்று ஒருவன் தனியாகக் கடையைக் காத்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் கூட இல்லை.

ஆனல் பழைய காலத்து 'ஷாப்பிங்' இப்படிச் சப் பென்று இருக்க வில்லை. ஒருவர் வேட்டி வாங் கச் சந்தைக்குப் போகிருர் என்று வைத்துக் கொள் ளுங்கள். விற்பனைக்காக வேட்டிகளைக் கடையில் வைத்ததுமே கடைக்காரர் அவற்றை இரண்டு ரூபாய்க்குத் தான் கொடுப்பது என்று தீர்மானித் திருப்பார். வாங்கப் போகிறவருக்கும் வேட்டியைக் கண்டதும், அது இரண்டு ரூபாய்க்குத்தான் கிடைக் கும் என்று தெரியும். ஏன் முதல் நாள், அதே கடையில் வேட்டி வாங்கிய நண்பரே, தாம் இரண்டு ரூபாய் கொடுத்து வாங்கியதாகத் தானே இவரிடம் கூறி யிருக்கிருர்? இவ் விஷயம் கடைக்காரருக்கும் தெரிந்திருக்கும்.

இருந்தாலும் வாங்க வந்தவர், "வேட்டி என்ன விலை?" என்று கேட்டதும் "பத்து ரூபாய்" என்று தான் பதில் வரும்.

"என்னய்யா, பத்து ரூபாய் என்று பொய் சொல்லுகிறீர்? நேற்று என் நண்பருக்கு இரண்டு ரூபாய்க்கு விற்ற விஷயம் எனக்குத் தெரியாது என்று நினைத்துக் கொண்டிருக்கிறீரா, என்ன?" என்று வாங்க வந்தவர் சொல்லலா மல்லவா? மாட்டார். சொன்னால் அத்துடன் பேரம் முடிந்து விடுமே! அப்புறம் கடைக்குப் போய் சாமான் வாங்குவதில் என்ன சுவாரசியம் இருக்கிறது?

ஆகவே வாங்க வந்தவர் வேஷ்டியை மேலும் கீழும் பார்ப்பார். நீள, அகலம் எவ்வளவு இருக்கிறது என்று பார்ப்பார். வேஷ்டியைக் கிழிக்க முடியுமா என்று தம் பலம் கொண்ட மட்டும் இழுத்துப் பார்ப்பார். பிறகு, கடைசியில், விளக்கெண்ணெய் குடித்தவர் போல் தம் முகத்தை வைத்துக் கொண்டு, "என்ன வேஷ்டி ஐயா, இது? திராபை. துளிக் கூட உறுதியா யில்லை" என்று சொல்லி விட்டு, "ஒரு ரூபாய்க்குக் கொடுக்க முடியுமா?" என்று கேட்பார்.

"முடியாது, கட்டாது" என்று கடைக்காரர் சொல்லலாமோ, இல்லையோ? மாட்டார்.

"ஏன் ஐயா, முன்னே, பின்னே வேஷ்டி வாங்கி யிருக்காயா நீ?" என்று கேட்பார்.

என்னடா, ஆளைப் பார்த்தால் நாற்பது வயது இருக்கும் போலிருக்கிறதே, இத்தனை நாளாக வேட்டி வாங்காமலா காலம் தள்ளி வந்திருப்பார் என்று அந்தக் கடைக்காரர் எண்ணிப் பார்க்க வேண்டுமே? கிடையாது! வேஷ்டி வாங்க வந்தவ

ராவது இது விஷயத்தைக் கடைக்காரருக்கு நினைப் பூட்டலா மல்லவா? மாட்டார். அதற்குப் பதில் "ஏன் ஐயா, முன்னே பின்னே வேஷ்டி விற்றிருக் கிறாயா, நீ?" என்று பதில் கேட்பார்.

இதிலிருந்து இருவருக்கு மிடையே வெகு சுவாரசியமான பேச்சு வார்த்தை ஆரம்பிக்கும். கடைக்காரர் வாங்க வந்தவரின் குலங் கோத்திரங் களையும், அவர் முக அழகையும் வர்ணிக்க ஆரம் பிப்பார். வாங்க வந்தவரும், சளைக்காமல், பதிலுக் குப் பதில் கடைக்காரரை வர்ணித்துக்கொண்டே வருவார். ஒவ்வொரு வர்ணனைக்கும் இடையில் வாங்க வந்தவர் ஒரு "வாக்-அவுட்" செய்வார். ஒவ் வொரு "வாக்-அவுட்"டுக்கும் பிறகும் வாங்க வந்த வர் விலையை ஒரு இரண்டணு உயர்த்துவார். கடைக் காரர் ஒரு ரூபாய் குறைப்பார். கடைசியாக பேரம் இரண்டு ரூபாயில் வந்து நிற்கும். வாங்க வந்தவர் வேண்டா வெறுப்புடன் வாங்குபவர் போல் இரண்டு ரூபாயை வீசி எறிவார். கடைக்காரரும், "தலையில் எழுத்தே" என்று விற்பவர் போல் வேஷ்டியை வீசி எறிவார்.

இரண்டு பேரும் இப்படிச் செய்கிறார்களே யொழிய உள்ளூர இரண்டு பேருக்கும் தாங்கள் பேரம் பேசியதைப் பற்றி மிக்கத் திருப்தி என்பதில் சந்தேக மில்லை. வாங்க வந்தவர், தாம் வீட்டுக்குத் திரும்பியதும், தம் நண்பர்கள் எல்லோரிடமும் வேஷ்டியைக் காட்டி, "வேஷ்டி கட்டாயம் மூன்று ரூபாயாவது பெறும். அதை நான் இரண்டு

ரூபாய்க்குத் தட்டிக் கொண்டு வந்துவிட்டேன்" என்று சொல்லிக் கொண்டிருப்பார். கடைக்காரரும் அதே மாதிரி, "ஒரு ரூபாய் வேஷ்டியை ஒருவன் தலையில் இன்று இரண்டு ரூபாய்க்குக் கட்டிவிட்டேன்" என்று சந்தோஷப் பட்டுக்கொண்டிருப்பார்.

ஆகக் கூடி இந்தப் பேரம் பேசுவதில் எத்தனையோ சுவாரசியம் உண்டு. இந்த சுவாரசியம் இனி மேல் எங்கே காணக் கிடைக்கப் போகிறது? இந்த வரதட்சிணை பேரம் பண்ணுகிறவர்களாவது இதைக் கைவிடாமல் இருக்கட்டும்!

பேரத்தைப் பற்றி எழுதிக் கொண்டிருந்த சுவாரசியத்தில் இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் கம்பளி வாங்கச் சென்ற குடியானவனை மறந்தே விட்டேன். அவன் கம்பளி வாங்கினனா, இல்லையா என்பதையும் அவன் கம்பளி வாங்கக் கடைக்குச் சென்றதற்கும், இந்தப் புஸ்தகத்துக்கும் என்ன சம்பந்தம் என்பதையும் அடுத்த அத்தியாயத்தில் தான் கவனிக்க வேண்டும்.

---

## கதை முடிகிறது

அந்தக் குடியானவன் வெகு நேரம் பேரம் பேசிய பிறகு ஏதோ ஒரு விலேக்கு பேரத்தை முடித்தான். கடைக்காரன் கம்பளியைச் சுருட்டி குடியானவன் கையில் கொடுத்தான். குடியான வன் தான் மேல் வேஷ்டியில் முடியிட்டிருந்த மோக ராவை எடுத்துக் கடைக்காரனுக்குக் கொடுத்து, "இந்தா, மீதியைக் கொடு ஐயா" என்று கேட் டான்.

மோகராவைப் பெற்றுக் கொண்ட கடைக் காரன், மீதி கொடுப்பதற்காகப் பெட்டியைத் திறக் காமல் மோகராவையும் குடியானவனையும் மாறி, மாறிப் பார்க்க ஆரம்பித்து விட்டான். இதைக் கண்ட குடியானவனும் மோகராவையும், கடைக் காரனையும் மாறி, மாறிப் பார்த்தான். இந்த நாடகம் ஒரு பத்து நிமிஷத்துக்கு நடந்தது. கடை சியில், கடைக்காரன் குடியானவனை முழித்துப் பார்த்தான். "என்ன ஐயா? கள்ள நாணயத் தைக் கொடுத்து ஏமாற்றப் பார்க்கிறீரா, என்ன? வாரும் நியாய சபைக்கு!" என்று குடியானவனை நியாய சபைக்கு இழுத்துக்கொண்டு போனன். நியாயாதிபதியும் மோகராவையும், குடியானவனையும் மாறி, மாறிப் பார்த்தார். அது கள்ள நாணயம் தான் என்று தீர்மானித்துக் குடியானவனைச் சிறைச் சாலைக்கு அனுப்பி விட்டார்.

குடியானவன் செய்த அதிர்ஷ்டம், அவன் சிறையில் ஒரு வாரத்துக்குமேல் இருக்கவில்லை. இந்த ஒரு வாரத்துக்குள் இது விஷயம் கஜானு அதிகாரிகளுக்கு எட்ட, அவர்கள் நாணயத்தைப் பார்த்துவிட்டு, "இது சுத்தத் தங்கம். துளிக் கூடக் கலப் பில்லாதது. இது கள்ள நாணயம் அல்ல" என்று கூறி குடியானவனை விடுதலை செய்தனர்.

ஆகையால் நேயர்களே! இக் கதையிலிருந்து நாம் கற்றுக் கொள்ளும் படிப்பினை என்ன என் பதைக் கவனியுங்கள். கலப்பு உலோகம் நாணய மாக வழங்கிவரும் இடத்தில் சுத்த நாணயம் கள்ள நாணயமாகத்தான் கருதப்படும். அதைப் போலவே பொய்யே மலிந்து கிடக்கும் இந்த உலகில் மெய் பொய்யாகத்தான் தோற்றமளிக்கும்.

---

இந்தக் கதையைக் கேட்ட பிறகு கூட சிலர், "பொய் சொல்லுவதா!" என்று யோசிக்கலாம். அப்பேர்ப்பட்டவர்களுக் காகத்தான் இந்த அத்தி யாயம்.

பொய்யை அடிப்படையாகக் கொண்டு அமைக் கப்பட்டிருக்கும் இந்த சமூகத்தில் ஒருநாள் ஒருவர் மெய்யே சொல்லுவது என்று தீர்மானிக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்பொழுது எவ்வளவு அனர்த்தம் விளையும் என்கிறீர்கள்!

நண்பர் ராமசுவாமி அவர்களுக்கு இருந்தால் போலிருந்து திடீரென்று பயித்தியம் பிடித்து விடு கிறது. பொய் சொல்லி, பொய் சொல்லி வாழ் நாளை யெல்லாம் வீணாக்கி விட்டோமே யென்று வருத்தப்படுகிறார். "சட்! இனிமேல் பொய்யே சொல்லுவதில்லை" என்று தீர்மானிக்கிறார். அடுத்த கணமே ஒரு சந்தேகம் தோன்றுகிறது. தீர்மானம் சுலபமாக முடிந்து விட்டதே யொழிய அனுஷ்டா னத்தில் முடியுமா என்கிற சந்தேகம். "சரி, இன்று ஒரு நாளைக்கு மாத்திரம் பொய் சொல் லாமல் இருந்து பார்ப்போம்" என்று தீர்மானிக் கிறார்.

தீர்மானித்து முடித்தது தான் தாமதம், இவ ரைப் பார்க்க செட்டியார் வந்து சேர்கிறார். செட்டி

யாரிடம் நண்பர் ராமசுவாமி நிறையக் கடன் வாங்கி யிருக்கிறார். திருப்பிக் கொடுத்தபாடில்லை. இந்த சமயம் டில்லியில் அவருக்கு யுத்த வேலை ஒன்று கிடைத்து விட்டதால், செட்டியாருக்கு நாமம் போட்டுவிட்டு, டில்லிக்குப் போய் விடலாம் என்று தீர்மானம் பண்ணி வைத்திருக்கிறார்.

ஆகவே செட்டியார் வழக்கம்போல், "என்னய்யா! பணம், கிணம் கொடுக்கப் போறியா? அல்லது வழக்கம்போல், பணம் இல்லை யென்று பொய் சொல்லப் போறியா?" என்று சம்பாஷணையை ஆரம்பித்ததும், ராமசுவாமி, அப்பொழுது தான் தாம் செய்து முடித்த தீர்மானத்தின்படி, நிஜம் சொல்ல ஆரம்பிக்கிறார்.

"இந்தாயா! சும்மாக் கூச்சல் போடாதே. இன்றைக்கு நான் நிஜம் தான் சொல்லுவது என்று தீர்மானித்திருக்கிறேன். ஆகவே உண்மையைச் சொல்லி விடுகிறேனே! எனக்கு டில்லியில் ஒரு பெரிய வேலை கிடைத்து விட்டது. அடுத்த வாரம் டில்லிக்குப் புறப்பட்டு விடப் போகிறேன். ஆகவே அது வரையில் உமக்கு சால் ஜாப்பு சொல்லி ஏமாற்றி விட்டுப் போய்விடலாம் என்று இருக்கிறேன்" என்று சொல்கிறார்.

சத்திய அரிச்சந்திரன் பிறந்த இந்த நாட்டில், உண்மையைச் சொன்னதற்காக செட்டியார் ராமசுவாமியை மெச்ச வேண்டுமே? கிடையாது. அதற்குப் பதில், தம் கைத் தடி கொண்டு ராம

சுவாமியின் காலை யொடிக்கிறார். பாவம், ராமசுவாமி நொண்டிக் கொண்டே ஆபீஸ் போய்ச் சேர்கிறார்.

ஆபீசில் அன்று அவர் இரண்டு நிமிஷம் லேட்! வழக்கமாகப் பதினேறு மணிக்கு வரும் மானேஜர் அன்றைக்குப் பத்து மணிக்கு முன்னலேயே வந்து ஆபீஸில் காத்திருக்கிறார். ராமசுவாமி இரண்டு நிமிஷம் தாமதமாக வந்ததைக் கண்டதும் மானேஜருக்குக் கோபம் உண்டாகிறது. "இப்படி லேட்டாக வந்தால் ஆபீஸ் எப்படி உருப்படும்?" என்று சீறி விழுகிறார்.

"இன்றைக்கு இரண்டு நிமிஷம் லேட்டாக வந்ததற்குப் பிரமாதமாகக் கோபித்துக் கொள்ளுகிறீர்களே! நான் தினம் அரை மணியும், முக்கால் மணியும் லேட்டாக வருவது தெரிந்தால் என்ன பண்ணுவீரோ?" என்று உண்மையைச் சொல்லுகிறார் ராமசுவாமி.

சத்திய அரிச்சந்திரன் பிறந்த இந்த நாட்டில், உண்மையைச் சொன்னதற்காக மானேஜர் அவரை மெச்சுகிறாரா? இல்லை. அதற்குப் பதில் அவரை சஸ்பெண்டு செய்கிறார்.

ராமசுவாமி வீடு திரும்புகிறார். "இப்படி வேலையைத் தொலைத்துவிட்டு வந்து நிற்கிறேளே!" என்று அவருடைய மனைவி கோபித்துக் கொள்கிறாள். இதற்குப் பதிலாக ராமசுவாமி தம் மனைவியின் ரூபலாவண்யத்தைப் பற்றித் தமக்குள்ள உண்மை அபிப்பிராயத்தை வெளியிட ஆரம்பிக்கிறார். மூஞ்சி குரங்குபோல் இருக்கிறது, குரல்

கழுதைபோல் இருக்கிறது—என்று இப்படி அடுக்கிக் கொண்டே போகிறார்.

சத்திய அரிச்சந்திரன் பிறந்த இந்த நாட்டில், உண்மையைச் சொன்னதற்காக அந்த அம்மாள் தன் புருஷனை மெச்சிக் கொள்ள வேண்டுமே? கிடையாது. அதற்குப் பதில் அன்று வருவதாகச் சொல்லி யிருக்கும் தன் தகப்பனருடன் பிறந்தகம் போகத் தீர்மானிக்கிறாள். "எப்படியாவது தொலை" என்று சொல்லி விட்டு ராமசுவாமி வெளியே வருகிறார்.

ராமசுவாமி வாசற்படிக்கு வருகிறார், மாமனரே ஊரிலிருந்து வந்து இறங்குகிறார். "ரொம்ப அவசரமாகப் போய்க் கொண்டிருக்காப்பலே இருக்கு" என்று மாமனர் மாப்பிள்ளையை விசாரிக்கிறார். "ஆமாம். அவசரமாகத்தான் போய்க் கொண்டிருக்கிறேன்" என்று ராமசுவாமி சொல்லி வைக்கக் கூடாதோ! அதற்குப் பதில் உண்மையைச் சொல்ல ஆரம்பிக்கிறார்.

"உம்மைக் கண்டால் எனக்குப் பிடிக்கவில்லை. நீர் வருகிற சமயத்தில் வீட்டில் இருக்க வேண்டாமென்றுதான் அவசரம், அவசரமாக வெளியே புறப்பட்டுக் கொண்டிருந்தேன். அதற்குள் வந்து தொலைந்து விட்டீர்கள்" என்று உண்மையைக் கூறுகிறார்.

சத்திய அரிச்சந்திரன் பிறந்த இந் நாட்டில், உண்மையைச் சொன்னதற்காக மாமனர் மாப்பிள்ளையை மெச்சிக் கொள்கிறாரோ? கிடையாது.

அதற்குப் பதில் மாப்பிள்ளையைக் கன்னுபின்னு வென்று வைதுவிட்டு, பெண்ணை அழைத்துக் கொண்டு ஊர் போய்ச் சேர்கிறார்.

ஒரு நாள் உண்மை சொன்னதால் விளைந்த அனர்த்தம் இத்தனை யென்றால், வாழ்க்கை முழு வதும் உண்மை சொல்ல முற்பட்டால் எவ்வளவு அனர்த்தம் விளையும் என்று நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்!

---

## பொருந்தச் சொல்லுதல்

**பொய்** சொல்லுவது கூடாது என்பதற்குச் சிலர் இன்னொரு காரணம் கூறுவதுண்டு. ஒரு பொய் சொன்னல் அதை மறைக்க இன்னொரு பொய் சொல்லவேண்டி வருமாம், பிறகு இதை மறைக்க இன்னொரு பொய், அதை மறைக்க இன்னொரு பொய் என்று இப்படி இது வளர்ந்து கொண்டே போய் விடுமாம்.

"இருக்கட்டுமே, பொய் வளர்ந்துகொண்டே போகட்டுமே, என்ன வந்துவிட்டது?" என்று கேட்கிறேன். இது தெரிந்து தானே நம் பெரியவர்கள், "பொய் சொன்னல் பொருந்தச் சொல்லு" அதாவது, ஒரு பொய்க்குப் பக்க பலம் கொடுக்க ஒன்பது பொய் சொல்லு என்று திருவாய் மலர்ந்தருளி யிருக்கின்றனர்!

பொய் சொல்லுவதில் பிழைக்கும் வழியைத் தவிர இன்னும் ஒரு பெரிய அநுகூலமும் இருக்கிறது. பொய் சொல்லுவதால் நம்முடைய கற்பன சக்தி எவ்வளவு நன்கு வளர்கிறது என்பது பொய் சொல்லுகிறவர்களைப் பார்த்தால் தான் தெரியும். என்னைக் கேட்டால், நம்முடைய கற்பன சக்தி நன்கு வளர்வதற்குப் பொய் சொல்லுவதைத் தவிர வேறு சிறந்த வழி இருப்பதாகத் தெரியவில்லை.

நிஜம் சொல்வதற்குச் சாமர்த்தியமே வேண்டிய தில்லை. எந்த மடையனும் நிஜம் சொல்ல

லாம். ஆனல் பொய் சொல்லுவதற்கோ, அப்படி யல்ல. நம்முடைய கற்பனு சக்தியை நன்கு உப யோகப்படுத்தினல் தான் அது முடியும். நாம் எவ்வளவுக் கெவ்வளவு நம் கற்பனு சக்தியை நன்கு உபயோகப் படுத்துகிறேமோ, அவ்வளவுக் கவ் வளவு உலகம் நம்மைகெட்டிக்காரன் என்றுகூறும்.

உதாரணத்துக்கு, இந்த வக்கீல்களை எடுத்துக் கொள்ளுங்கள். இவர்கள் எத்தனைக் கெத்தனை தங்கள் கற்பனு சக்தியை உபயோகித்து பொய் கேஸ் ஜோடிக்கிறர்களோ, அவ்வளவக்கவ்வளவு இவர்களுக்குக் கெட்டிக் காரர்கள் என்று பெயர். கட்சிக்காரர்களும், அவர்களுக்குப் பின்னல் பண மும் இத்தகைய கெட்டிக்கார வக்கீல்களைப் போய்ச் சேர்கின்றன.

முன்னெல்லாம் வைத்தியர்கள் சத்திய சந்தர் களாக இருந்தார்கள். இந்த வக்கீல்களைப் பார்த் துக் கொண்டு அவர்களும் இப்பொழுது கெட்டிக் காரர்களாகி விட்டார்கள். பிழைக்கும் வழி தெரிந்து கொண்டு விட்டார்கள். இப்பொழு தெல்லாம் வியாதியஸ்தனின் வியாதியைக் குணப் படுத்துவதைப் பற்றி அவர்கள் கவலைப் படுவது கிடையாது. அதற்குப் பதில் வியாதியஸ்தனுக்கு என்னென்ன புது வியாதிகள் இருக்கின்றன என்று கண்டு பிடித்துச் சொல்லுவதிலேயே மும்முரமாய் இருக்கின்றனர்.

பத்து வருஷத்திற்கு முன்னர் நூறு வியாதி களுக்கு மேல் தெரியாமல் இருந்தவர்கள், அந்த

நூறு வியாதிகளையும் எப்படி எப்படி ஜதை சேர்க்க முடியுமோ, அப்படி யெல்லாம் சேர்த்து, இப் பொழுது லட்சக் கணக்கான வியாதிகளைக் கண்டு பிடித்து விட்டனர்! இன்னும் புதுப் புது வியாதிகள் கண்டு பிடித்துக் கொண்டிருக்கின்றனர்.

ஆகவே பொய் சொல்ல வேண்டுமானால், நம் கற்பனா சக்தியை உபயோகித்துத் தொடர்ந்து சொல்லிக் கொண்டே போக வேண்டும். ஒரு நாள் பொய் சொல்லுவது, இன்னொரு நாள் நிஜம் சொல்லுவது என்று இருந்தால் நம் வார்த்தையை நிஜம் என்று யாரும் நம்ப மாட்டார்கள். நடுவில், நடுவில் நிஜம் சொல்லிப் பிரயோசனமில்லை. அந்த நிஜமும் பொய்யாகத் தான் படும்.

உதாரணமாக, வழக்கமாகத் தண்ணீரில் பாலைக் கலந்து கொண்டு வரும் பால்காரன் நிஜ மாகவே சுயம் பால் கொண்டு வந்தால் கூட ஜனங்கள் நம்புவதில்லை. நம் கண்ணெதிரே மாட்டைக் கொண்டு வந்து, பாத்திரத்தைக் கவிழ்த்து விட்டுக் கறந்தாலும் அவனை நம்பமாட் டோம். பால்காரன் ஏதோ சூது பண்ணுகிறான், அதைக் கண்டு பிடிக்க நமக்குச் சாமர்த்தியம் போத வில்லை என்று நம் சாமர்த்தியக் குறைவை நொந்து கொள்வோமே யொழிய, பால்காரன் சுயப் பால் கொடுக்கிறான் என்று நம்ப விரும்ப மாட்டோம்.

இது விஷயம் பால் காரனுக்கு நன்கு தெரியும். தண்ணீர் விடாமல், சுயப் பால் கொண்டு வந்து கொடுத்தாலும், நல்ல பெயர் கிடைக்கப் போவ

தில்லை என்று அவனுக்குத் தெரியும். அதனால் தான் நாம் அவனை எவ்வளவு கண்டித்தாலும், அவன் தண்ணீரால் கழுவப் பட்ட 'சுத்தமான' பாலைத் தான் கொண்டு வந்து தருவான்.

பொய் சொன்னால் தொடர்ந்து சொல்லிக் கொண்டே போக வேண்டும் என்பதை நம் பெரியோர்களே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் என்று தெரிகிறது. இந்தப் புலிக் கதையையே எடுத்துக் கொள்ளுங்கள். இரண்டு தடவை, "புலி வருகிறது" "புலி வருகிறது" என்று பொய் சொன்ன பையன் மூன்றாம் தடவை தொடர்ந்து பொய் சொல்லாமல், "புலி வருகிறது" என்று உண்மையைச் சொன்ன படியால் தான் புலியால் கொல்லப் பட்டு இறந்தான். "புலி வருகிறது" என்று சொல்வதற்குப் பதில் "சிங்கம் வருகிறது" என்று பொய் சொல்லி யிருந்தால் அவன் பிழைத்திருப்பான் என்பதில் சந்தேகம் இல்லை.

சிலர் இருக்கிறார்கள். பொய் தான் சொல்லுகிறார்கள். ஆனால் அவர்கள் சொல்லுவது பொய் தான் என்று பிறர் எளிதில் கண்டு பிடித்து விட முடிகிறது. இது கூடாது.

நம் கையிலுள்ள வைரம் ரங்கூன் வைரமாய் இருந்தாலும் பிறர் அதை நிஜ வைரம் என்று நினைத்துக் கொள்ளும்படி தான் நாம் நடந்து கொள்ளவேண்டும். அப்பொழுது தான் நாம் பிழைக்கலாம்.

---

அஸ்திவாரம் மிகவும் பலமாகப் போட்டு விட்ட படியால் மேலே கட்டிடம் கட்டச் செல்லலாம் என்று பார்க்கிறேன்.

பிழைக்கும் வழிக்கு, பொய் சொல்வதற்கு அடுத்தபடி, வெகு நன்கு தெரிய வேண்டிய விஷயம் காக்கா பிடித்தல் ஆகும்.

காக்கா பிடித்தல் என்ருல் எல்லோருக்கும் என்ன என்று தெரியும். இதையே, 'குல்லாப் போடுதல்' என்றும் சிலர் சொல்வார்கள்.

'காக்கா பிடித்தல்' என்ற பதப் பிரயோகம் எப்படி ஏற்பட்டது என்று கண்டு பிடிக்க எனக்கு வெகு ஆவல். ஆகவே இது விஷயமாக வெகு நாள் ஆராய்ச்சி செய்து, பின் கண்ட முடிவுக்கு வந்திருக்கிறேன்.

முன்ஞெரு காலத்தில் வேடன் ஒருவன் இருந்தான். அவனுக்கு வள்ளி என்று அழகிய பெண் ஒருத்தி இருந்தாள். அவளுக்குப் பருவகாலம் வந்ததும், பூக்களை வண்டுகள் மொய்ப்பது போல, அவளை எத்தனையோ வாலிபர்கள் சூழ்ந்து கொண்டனர். இந்தக் காலத்தைப் போல் ஒரு ஆண் ஜாதகத்தை நூறு பெண் ஜாதகங்கள் சூழ்ந்து கொள்ளும் காலம் அல்ல அது. வேடனுக்கு என்ன பண்ணுவது என்று தெரியவில்லை. தன் பெண்

வள்ளியை யாருக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுப்பது என்று புரிய வில்லை. வாலிபர்களோ 'வள்ளியை நான் தான் கட்டிக் கொள்வேன், நான் தான் கட்டிக் கொள்வேன்' என்று சண்டை போடத் தொடங்கி விட்டனர்.

கடைசியில் வேடன் ஒரு யுக்தி கண்டு பிடித்தான். வேடனிடம் ஒரு அழகான காக்கை இருந்தது. வேடன் அதைக் கூண்டில் வைத்து மிக அருமையாக வளர்த்து வந்தான். அதை ஒரு நாள் கூண்டி லிருந்து வெளியே விட்டு, அதை எவன் பிடித்துத் தருகிறானோ அவனுக்குத் தான் தன் பெண்ணைக் கொடுக்கப் போவதாகச் சொன்னான். வள்ளியைக் காதலித்த வாலிபர்களால் காக்காயைப் பிடிக்க முடிய வில்லை. "சீ! போடா!" என்று காக்கையையும் கல்யாணத்தையும் கை விட்டார்கள்.

இவர்களில் வேலன் என்று ஒருவன் இருந்தான். இவன் வெகு நாள் கஷ்டப்பட்டு, அந்தக் காகத்தைப் பிடித்தே கொண்டு வந்து விட்டான். அதை வேடனிடம் கொடுத்து வள்ளியின் அன்புக்கு பாத்திரமானான்: இதைக் கண்ட மற்ற வாலிபர்கள், "வேலன் கெட்டிக்காரன் தாண்டா. காக்கா பிடித்து வள்ளியைக் கட்டிக் கொண்டு விட்டான்" என்று சொன்னார்கள்.

அதிலிருந்து கெட்டிக் காரத்தனமாகக் காரியத்தைச் சாதித்துக் கொள்ளும் வழிக்கு, "காக்கா பிடித்தல்" என்று பெயர் வழங்கலாயிற்று.

உங்கள் காதோடு ஒரு வார்த்தை. வேலன் பிடித்துக் கொடுத்தது வேடனுடைய காக்கையல்ல. ஏதோ ஒரு காக்கையைப் பிடித்து "இந்தாரும் உம்முடைய காக்கை" என்று வேடனிடம் கொடுத்து ஏமாற்றி விட்டான். காக்கைக்குக் காக்கை எங்கே வித்தியாசம் தெரியப்போகிறது? இது ரகசியத்தை நீங்கள் வெளியில் சொல்லி விடாதீர்கள்!

இந்தக் கதையைப் படித்து விட்டு, "என்னய்யா காது குத்துகிறீர்?" என்று சிலர் கேட்கலாம்.

என்ன, என்ன சொல்லுகிறீர்கள்?............... கேட்கப் போவதில்லையா?...........ஊஹூம். அதெல்லாம் முடியாது. நீங்கள் கேட்டுத் தான் ஆக வேண்டும். இல்லாவிடில் காது குத்தல் விஷயமாக நான் செய்திருக்கும் ஆராய்ச்சியை எப்பொழுது வெளியிடுவது?

"காது குத்தல்" என்னும் பதப் பிரயோகம் எப்படி வந்தது என்று தெரிந்து கொள்ள வெகு ஆவலாக இருக்கிறீர்கள் அல்லவா? இதோ சொல்லுகிறேன், கேளுங்கள்.

முன்னொரு காலத்தில் சோழ வள நாட்டில் ஒரு பிரபல தட்டான் இருந்தான். அந்தக் காலத்தில் புருஷர்கள் காது குத்திக் கொள்ளாமல் இருப்பது மிகவும் அநாகரிகம் என்று கருதப்பட்டு வந்தது. ஆகவே உலகத்தின் எல்லாப் பாகங்களி லிருந்தும், அரசர்களும், பிரபுக்களும் காது குத்திக் கொள்வதற்காக இத் தட்டானைத் தேடி வருவார்கள்.

தட்டான் மகா சாமர்த்திய சாலி. பெரிய, பெரிய அரசர்களுக்குக் காது குத்தும் தட்டான் சாமர்த்திய சாலியாக இல்லாமல் அசடாகவா இருப்பான்? காது குத்தும் போது, குத்திக் கொள்ளுகிறவர்களுக்கு வலிக்காமல் இருப்பதற்காக, வேடிக்கை, வேடிக்கையாகக் கதைகள் சொல்லுவான். நடக்க முடியாத விஷயங்களை யெல்லாம் நடந்ததாகக் கயிறு திரிப்பான். பயப்படாதீர்கள்! 'கயிறு திரித்தல்' என்ற பதப் பிரயோகம் விஷயமாக நான் செய்திருக்கும் ஆராய்ச்சியை வெளியிட்டு, உங்கள் பொறுமையைச் சோதிக்கப் போவதில்லை!

இவன் சொல்லும் கதைகளைக் கேட்பதற்காகவே எல்லோரும் இத் தட்டானிடம் காது குத்திக் கொள்ள வருவார்கள். சிலர், கதைகளின் மேலுள்ள ஆவலில், இருபது, முப்பது தடவைகள் கூடத் தங்கள் காதுகளைக் குத்திக் கொள்ளுவார்கள்.

தட்டானுடைய பெயர் பிராபல்ய மடையவே அவன் மேல் பொறாமை கொள்ள ஆரம்பித்தனர் பலர். பொய்க் கதை சொல்லுவதனால் அல்லவா இவனுக்கு இத்தனை பெயர் உண்டாயிற்று என்று கருதி, இவர்களும் பொய்க் கதைகள் சொல்ல ஆரம்பித்தனர். இதைப் பார்த்து ஜனங்கள், "நீங்களும் காது குத்துகிறீர்கள் என்று அர்த்தமா?" என்று கேட்பதற்காக, (ஏனெனில் காது குத்தும் போது மட்டும் தானே பொய்க் கதைகள் கூறலாம்?)

"என்னய்யா, காது குத்தறயா?" என்று கேட்க ஆரம்பித்தனர். இதிலிருந்து பொய்க் கதைகள் சொல்லுவதற்குக் "காது குத்தல்" என்று பெயர் வழங்கலாயிற்று. இது நிற்க.

தற்கால யுவர்கள் இருக்கிறார்களே, சுத்த மோசம்! காக்கா பிடிக்கவே தெரிவதில்லை. காக்கா பிடிக்கத் தெரியா விட்டாலும் பரவாயில்லை. காக்கா பிடித்தால் தான் காரியத்தைச் சாதிக்கலாம் என்று தெரிந்து வைத்திருக்கிறார்களா, அதுவும் கிடையாது. இவர்கள் யோக்யதாம்சங்களைக் கொண்டு தான் உலகம் இவர்களை மதிப்பிடுவதாக இவர்கள் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்!

இவர்கள் வேலைக்காகப் போடும் மனுக்களிலிருந்தே இவர்கள் அசட்டுத் தனத்தைத் தெரிந்து கொண்டு விடலாம். நான் இது பாஸ் பண்ணியிருக்கிறேன், அது பாஸ் பண்ணி யிருக்கிறேன், எனக்கு இது தெரியும், எனக்கு அது தெரியும், நான் இதைப் பண்ணுவேன், நான் அதைப் பண்ணுவேன் என்று தான் இவர்கள் மனுக்கள் இருக்கும். இத்தகைய மனுக்களைக் கொண்டு இவர்களுக்கு யாரும் வேலை கொடுக்காததில் ஆச்சரியம் இல்லை.

இந்தக் காலத்தில் கெட்டிக்காரத்தனத்தை யார் கவனிக்கிறார்கள்? யோகியதாம்சங்கள் யாருக்கு வேண்டிக் கிடக்கின்றன? "காக்கா பிடிக்கத் தெரிகிறதா? சரி, வா, உள்ளே, உனக்கு

வேண்டியதை எடுத்துக் கொள்." "காக்கா பிடிக்கத் தெரியவில்லையா? சரி, போ, வெளியே. உனக்கு இங்கே இடம் கிடையாது. திண்டாடு" இது தான் உலக நியதியாக இருக்கிறது. இந்த உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும் கல்லார் அறிவிலாதார் அல்லவா?

---

## முதல் வழி

**கா**க்கா பிடிப்பது எப்படி? அதற்கு என்னென்ன சாதனங்கள் வேண்டும்?

உலகில் காக்கா பிடிப்பதற்கு எத்தனையோ வழிகள் இருக்கின்றன. அவை யெல்லா வற்றையும் இங்கே விவரித்துச் கொண்டிருப்பது என்பது முடியாது. அத்துடன் அந்தந்த சமயத்துக்கேற்ப பொருத்தமான வழியைக் கண்டு பிடித்து உபயோகப்படுத்தக் கூடிய சாமர்த்தியம் அனுபவத்தில் தான் வரும். ஆகவே முக்கியமாக உள்ள ஒன்றிரண்டு வழிகளை மாத்திரம் இங்கு குறிப்பிடலாம் என்று பார்க்கிறேன்.

காக்கா பிடிப்பதற்கு ஜனங்கள் வெகு நாளாகக் கையாண்டு வரும் வழி கறிகாய் வழியாகும். அதாவது நமக்கு யாரிடம் காரியம் ஆக வேண்டியிருக்கிறதோ, அவர்கள் வீட்டுக்கு அவர்களுக்குப் பிடித்தமான கறிகாய் எது என்று கண்டு பிடித்து அனுப்புவது.

ஒருவருக்கு எவ்வளவு தான் லஞ்சம் கொடுங்கள், இந்தக் கறிகாயைக் கொண்டு திருப்தி செய்வது போல் வேறு எதனுலும் செய்ய முடியாது. சில வக்கீல்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குக் கட்சிக்காரர்கள் எவ்வளவு தான் ஆயிரம், ஆயிரமாகப் பணத்தை அழட்டும், அவர்களுக்குத் திருப்தி ஏற்படாது. ஆனல் கட்சிக்காரர்கள் ஒரு நாளைக்கு

ஒரு வீசை கத்தரிக்காயைக் கொண்டு போய்க் கொடுக்கட்டும், அவர்கள் முகம் உடனே மலரும்.

என் நண்பர் ஒருவர் இருக்கிறார். பிழைக்கும் வழி வெகு நன்கு தெரிந்தவர். அவர், தனக்கு யார் யாரிடம் காரியம் ஆகவேண்டியிருக்கிறதோ அவர்கள் பெயரை யெல்லாம் வரிசையாக எழுதி, அவரவர்கள் பெயருக்கு எதிரே, அவரவர்களுக்குப் பிடித்தமான கறிகாய் என்னவென்று குறிப்பிட்டு வைத்திருக்கிறார். இந்த ஜாப்தாவைப் பார்ப்பதற்கு வெகு வேடிக்கையாக இருக்கும்.

கிருஷ்ணசாமி பிள்ளை—வெண்டைக்காய்
ராமசாமி அய்யர்—சுண்டைக்காய்
முருகேச முதலியார்—புடலங்காய்
நடராச பத்தர்—வாழைக்காய்

என்று இப்படி ஜாப்தா இருந்தால் வேடிக்கையாக இல்லாமல் பின் எப்படி இருக்கும்?

இந்த ஜாப்தாவில் நூற்றுக்கு மேற்பட்ட பெயர்கள் காணப்படுகின்றன. இருந்தாலும் நண்பருக்கு அத்தனையும் பொட்டை நெட்டுரு. ஏனெனில் அவர் இந்த நபர்களை நினைத்துக் கொள்ளும் போதே வெண்டைக்காய் கிருஷ்ணசாமி பிள்ளை, சுண்டைக்காய் ராமசாமி அய்யர், புடலங்காய் முருகேச முதலியார், வாழைக்காய் நடராச பத்தர் என்று இப்படி தான் நினைத்துக் கொள்வார்.

பணத்தைவிட இந்தக் கறிகாய்க்கு இத்தனை மகிமை எப்படி ஏற்பட்டது என்று கேட்கலாம். நானும் இதே கேள்வியை வெகு பேரைக் கேட்டு

விட்டேன். ஆனால் யாரும் சரியாகப் பதில் அளிக்க வில்லை.

எனக்கு என்னமோ இதற்கு இரண்டு காரணங்கள் தோன்றுகின்றன. எவ்வளவு பெரிய மனிதர்களானாலும் நாக்குக்கு அடிமைகள் தான். ஆகவே தங்களுக்குப் பிடித்தமான கறிகாயைக் கண்டதும் அதைக்கொண்டு வந்தவர்களிடம் அவர்களுக்குப் பிரியம் ஏற்படுவது சகஜமே.

இரண்டாவது காரணம், கறி காயைக் கண்டதும் வீட்டு எஜமானிக்கு அதைக் கொண்டு வந்தவரிடம் கிருபை ஏற்பட்டு விடுகிறது. பொதுவாகவே, எந்த வீட்டிலும் வீட்டுக்காரர்கள் மார்கெட்டுக்குப் போய் கறிகாய் வாங்கிக்கொண்டு வர சோம்பேறித்தனப் படுகிறவர்கள்தான். வீட்டில் வேலைக்காரர்கள் இருக்கிறார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அவர்களை அனுப்பினால் சொத்தையையும், சொள்ளையையுந்தான் வாங்கிக்கொண்டு வந்து சேர்வார்கள். ஆகவே யாராவது நல்ல கறிகாய் கொண்டு வந்து கொடுத்தால் வீட்டு அம்மாளுக்கு அவர்மீது கிருபை விழுவது சகஜமே. அம்பாள் கிருபை செய்த பிறகு சுவாமி வரம் கொடுக்க மாட்டேன் என்றா சொல்வார்?

அப்படி வீட்டு எஜமான் மறந்து விட்டாலும் அம்மாளிடம் ஒரு வார்த்தை போட்டு விட்டால் போதும். அம்மாள் அதைப் பக்குவமான சமயம் பார்த்துத் தன் புருஷனிடம் சொல்லிக் காரியத்தைச் சாதித்துக் கொடுப்பாள் என்பதில் சந்தேகமில்லை.

நீங்கள் கறிகாய் கொண்டு வந்து கொடுப்பது வீட்டுக்காரருக்குத் தெரியவேண்டும் என்கிற அவசியங் கூட இல்லை. ஏனெனில் நீங்கள் கொடுக்கும் கறிகாய் அவருக்குப் பிடித்த கறிகாய் ஆனபடியால், சாப்பிடும் போது கறியை ருசி பார்த்துக் கொண்டே, "ஏது, கத்தரிக்காய் க்ன குஷியாக இருக்கிறதே? யார் வாங்கிக் கொண்டு வந்தா? வாசலில் வந்ததா, என்ன?" என்று கேட்பார். உடனே அம்மாள், நீங்கள் கொண்டு வந்து கொடுத்ததாகச் சொல்லி, உங்கள் காரியத்தையும் சொல்லுவாள். தம் மனதுக்குப் பிடித்த கத்தரிக்காயை வாங்கிக் கொண்டுவந்து கொடுத்த உங்களை அவர் மறப்பாரா? மாட்டார்.

இதில் கவனிக்க வேண்டிய ஒரே ஒரு விஷயம். நீங்கள் மார்க்கெட் டிலிருந்து கறிகாய் வாங்கிக் கொண்டு வந்ததாகச் சொல்லக் கூடாது. மார்க்கெட்டிலிருந்து கறிகாய் வாங்கிக்கொண்டு வருவதில் என்ன சுவாரசியம் இருக்கிறது? எல்லாருந்தான் மார்க்கெட்டிலிருந்து வாங்கிக்கொண்டு வருகிறார்கள். உங்கள் வீட்டுக் கொல்லையில் முளைத்தது என்றோ, அல்லது ஊரிலிருந்து வந்ததாகவோ சொல்ல வேண்டும். மார்க்கெட்டி லிருந்தே நீங்கள் கறிகாய் வாங்கிக் கொண்டு வந்தே கொடுத்தாலும், அதை உங்கள் வீட்டுக் கொல்லையில் முளைத்தது என்றோ, அல்லது ஊரிலிருந்து வந்த தாகவோ சொல்ல வேண்டும். அப்பொழுது அதற்கு உள்ள ருசியே அலாதி தான் போங்கள்!

---

## இரண்டாம் வழி

கறிகாய் வழிக்கு அடுத்த படியாக நான் சிபார்சு செய்யக் கூடியது குழந்தை வழியாகும். அதாவது யாரிடம் நமக்குக் காரியம் ஆக வேண்டி யிருக்கிறதோ, அவர்கள் குழந்தை களுடன் கொஞ்சி விளையாடுவது.

இந்தக் குழந்தை வழி சற்றுச் சிரமமான வழி தான். முக்கால் வாசிக் குழந்தைகளைக் கண்டால் நமக்குத் துளிக் கூடப் பிடிப்ப தில்லை. சிலதுகளைக் கண்டால் இந்தக் கன்னத்தில் இரண்டு, அந்தக் கன்னத்தில் இரண்டு கொடுக்கலாமா என்று கூடத் தோன்றும்.

இருந்தாலும் இக் குழந்தைகளைப் பற்றி நமக் குள்ள அபிப்பிராயத்தை நாம் வாய் விட்டுச் சொல் லவோ, அல்லது செய்கையில் காட்டவோ கூடாது. காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு என்று சொல்லுகிறார்கள் அல்லவா? அதை மனதில் கெட்டியாகப் பிடித்து வைத்துக் கொள்ளவேண்டும்.

எந்தத் தகப்பனுருக்கும் தன் குழந்தையைப் பற்றிப் பிரமாதமாகத்தான் அபிப்பிராயம் இருக் கும். குழந்தை வாயிலிருந்து புறப்படும் ஒவ்வொரு சத்தத்துக்கும் தகப்பனார் நீள நீளமான வியாக் கியானம் கொடுப்பதைப் பார்க்க நமக்கு ஆச்சரியம் ஆச்சரியமாக இருக்கும்.

குழந்தை 'அப்' பென்ருல், "பார்த்தாயா, அப்பா மக்கு, ஒண்ணும் தெரியாது என்று சொல்லு கிருன், பார்த்தாயா!" என்று தகப்பனர் சந்தோஷப் பட்டுக் கொள்வார். குழந்தை, 'அச்' சென்ருல், "பார்த்தாயா, அம்மாளை அடி அப்பா, அவள் எனக்குப் பட்சணம் தர மாட்டேங்கரு என்று சொல்ருன் குழந்தை" என்பார்.

பெற்ருேர்கள் தங்கள் குழந்தைகள் வாயிலிருந்து புறப்படும் ஒவ்வொரு சத்தத்துக்கும் இப்படி நீளம், நீளமாக வியாக்கியானம் செய்வதைப் பார்க்கும் போதெல்லாம் எனக்கு ஒரு யோசனை தோன்றுவது உண்டு. சுருக்கு எழுத்து என்று கண்டு பிடித்திருக்கிருர்களே, அதைப் போலவே சுருக்குப் பேச்சு என்று ஒன்று கண்டு பிடிக்கலாமே என்பது தான். "எனக்கு இப்பொழுது பட்சணம் தரப் போகிருயா, அல்லது நான் அப்பாகிட்டே போய்ச் சொல்லட்டுமா" என்னும் நீள வாக்கியத்தை குழந்தை எவ்வளவு அழகாக, நறுக்குத் தெரித்தாற் போல், "அப்பா," என்னும் ஒரே வார்த்தையில் சுருக்கி விடுகிறது, பாருங்கள்!

காக்காய் பிடிப்பதற்காகக் குழந்தை வழியைக் கையாளுகிறவர்களுக்கு, சாதாரணமாக இப்படியெல்லாம் யோசனை ஓடாது. "குழந்தையைப் பாருடா, குழந்தையை! கோட்டானுட்டம் ஐந்து வயது ஆகப் போகிறது! இன்னும் ஒரு வார்த்தை வர வில்லை. அடுத்தாற் போல் நம்ப ராஜுப் பயலும் இருக்கிருனே, அவன் வாயிலிருந்து எப்படி

வார்த்தைகள் கொட்டு கொட்டென்று கொட்டிக் கொண்டிருக்கின்றன!" என்று அவர்களுக்குத் தங்கள் ராஜூப் பயல் ஞாபகம் தான் வரும்.

மிகவும் நல்லதாகப் போச்சு. உங்கள் ராஜூப் பயல் மிகவும் கெட்டிக்காரன் என்றே ஒப்புக் கொள்ளுகிறேன். இந்த அடுத்த வீட்டு அண்ணு சாமி அய்யர் உங்கள் ராஜூப் பயலைப் பற்றி வேறு விதமான அபிப்பிராயம் கொண்டிருப்பதற்கு அசூயை தான் காரணம் என்றும் ஒப்புக் கொள்ளு கிறேன்.

நீங்கள் உங்கள் காரியாலய எஜமான் வீட்டுக்கே ஒரு காரியமாகப் போகிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். அங்கே உங்கள் எஜமான் குழந்தையைப் பார்க்கிறீர்கள். அந்தக் குழந்தையைப் பார்த்தால் உங்களுக்குத் துளிக்கூடப் பிடிக்கவில்லை. அதைப் பார்க்கும் போது உங்கள் ராஜூப் பயலின் சாமர்த்தியம் தான் உங்களுக்கு ஞாபகம் வருகிறது! மிகவும் நல்லதாகப் போச்சு! அந்த ஞாபகத்தை விட்டு விடாதீர்கள். கெட்டியாகப் பிடித்துக் கொள்ளுங்கள். பிடித்துக் கொண்டு எஜமான் குழந்தையை உங்கள் குழந்தையாகவே எண்ணிக் கொஞ்சி விளையாடுங்கள். கொஞ்ச காலத்திற்குள் உங்கள் எஜமானுடைய பணம், மோட்டார் வண்டி முதலியன எல்லாம் உங்களுடைய தாகா விட்டால் என்னை ஏன் என்று கேளுங்கள்!

சில குழந்தைகள் இருக்கின்றன. அவற்றுக்குச் சந்தோஷம் அளிக்கக் கூடிய விஷயம் ஒன்றே ஒன்று தான். அதாவது நாம் நம் முகத்தை எவ்வளவுக் கெவ்வளவு வக்கிரமாக வைத்துக் கொள்ளுகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு அக் குழந்தைகளுக்குச் சந்தோஷம். ஆகவே மானேஜரின் குழந்தைகளைக் காணும் போதெல்லாம் முகத்தை வக்கிரமாக வைத்துக் கொள்ளுங்கள். அதைக் கண்டு அக் குழந்தை சந்தோஷப் பட்டால் மானேஜர் சந்தோஷப்படுவார். மானேஜர் சந்தோஷப் பட்டால் நாம் சந்தோஷப் படலாம்.

---

## முன்னுக்கு வரும் வழி

கூாக்கா பிடித்து ஏதாவது ஒரு காரியாலயத்தில் வேலைக்கு அமர்கிறோம், அதில் முன்னுக்கு வருவது எப்படி ?

தற்காலத்தில் காரியாலயங்களில் வேலை பார்க்கும் யுவர்களுக்கு முன்னுக்கு வரும் வழி தெரிவதே இல்லை. தெரியா விட்டாலும் பரவாயில்லை, தவறுதலான அபிப்பிராயம் கொண்டு பின்னுக்குப் போய்க் கொண்டிருக்கிறார்களே, அது தான் வருத்தமாய் இருக்கிறது.

காரியாலயத்தில் நமக்குக் கொடுக்கப் பட்ட வேலையை எவ்வளவுக் கெவ்வளவு நன்கு செய்கிறோமோ, எவ்வளவுக் கெவ்வளவு நாயாக உழைக்கிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு சீக்கிரம் முன்னுக்கு வந்து விடலாம் என்று இவர்கள் நினைக்கிறார்கள். அப்படியே நாயாகவும் உழைக்கிறார்கள். ஆனல் இதற்குப் பலன் கிடைப்ப தில்லை.

இது மட்டுமன்று. "ஆள் அழகா, துப்பட்டிக்காரா" என்று வெறும் ஜம்பத்துக்கு காரியாலயத்துக்கு வந்து விட்டு, நாற்காலிக்குப் பாரமாக இருந்து விட்டுப் போகிறார்களே, அவர்கள் சட, சட வென்று முன்னுக்கு வந்து விடுவதைக் காண்கிறார்கள். இதை கண்டதும் இவர்களுக்கு என்ன செய்வது என்றே புரிவதில்லை. "சட்! உலகம் இப்படியும்

இருக்குமா? நல்லதுக்குக் காலமில்லை" என்று தங்கள் விதியையும், உலகத்தையும் நொந்து கொண்டு பேசாமல் இருந்து விடுகிறார்கள். பிறகு முன்னுக்கு வருவதைப் பற்றியே யோசிப்பதில்லை.

ஆனால் என்னைக் கேட்டால் தப்பெல்லாம் இவர்கள் மீது தான் என்று கூறுவேன். "எவ்வளவுக் கெவ்வளவு நீங்கள் நாயாக உழைக்கிறீர்களோ, அவ்வளவுக் கவ்வளவு நான் உங்களுக்குச் சம்பள உயர்வு தருகிறேன், உங்களைப் பாராட்டுகிறேன்" என்றெல்லாம் மானேஜர் இவர்களுக்கு வாக்குக் கொடுத்தாரா, கேட்கிறேன். இல்லை. ஏனெனில் மானேஜர் உலக இயற்கை தெரிந்தவர். அப்படி யெல்லாம் வாக்குக் கொடுக்க மாட்டார். அப்படிக் கொடுத்தால், அது இயற்கைக்கு விரோதம் என்பது அவருக்கு நன்கு தெரியும்.

மானேஜர் அப்படி வாக்குக் கொடுக்காத போது இவர் ஏன் நாயாக உழைக்கிறார், கேட்கிறேன். மானேஜருக்குத் தெரிந்த உலக இயற்கை இவருக்கு ஏன் தெரியாமல் போய் விட்டது?

ஓட, ஓட விரட்டுவது தான் உலக இயற்கை. ஒரு பொருள் எவ்வளவுக் கெவ்வளவு அழகாக இருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அதைப் பத்திரப் படுத்தி, அழகு பார்ப்பது தான் உலக இயற்கை. ஒரு பொருள் எவ்வளவுக் கெவ்வளவு பழசாக இருக்கிறதோ, அவ்வளவுக் கவ்வளவு அதைப் போட்டு உடைப்பது தான் உலக இயற்கை.

இது விஷயமாக உதாரணத்திற்கு வெகு தூரம் போக வேண்டாம். நம் வீட்டு ஸ்திரீகள் அணியும் புடவைகளையே எடுத்துக் கொள்ளுங்கள். நூறும், இரு நூறும் கொடுத்து, அடுக் கடுக்காகப் புடவை வாங்கி வைத்திருக்கிறார்களே, அவற்றை என்றைக் காவது வெளியில் எடுத்துக் கட்டிக் கொள்ளுகிறார் களா, கவனியுங்கள். மாட்டார்கள். பீரோவிலிருந்து அவற்றை வெளியில் எடுப்பதற்கே மனது வராது.

அப்படித் தப்பித் தவறி, ஒரு கலியாணம், கார்த்திகைக் கென்று தீராப் பொறியாக அவற்றை எடுக்க வேண்டி வருகிறது என்று வைத்துக் கொள் ளுங்கள், அவர்கள் மனம் படும் அவதியைச் சொல்லி முடியாது. கடைசியில் அவற்றை உடுத் திக் கொண்டாலும், எப்பொழுது அவிழ்த்து வைத்து விட்டுச் சாதாரணப் புடவை கட்டிக் கொள்ளப் போகிறோம் என்றே ஏங்கிக் கொண் டிருப்பார்கள். புதுப் புடவை இடுப்பில் இருக்கும் வரை கீழே உட்கார மாட்டார்கள். நின்று, நின்று காலை ஒடித்துக் கொள்ளுவார்களே யொழியப் புடவை அழுக்குப் பட விடமாட்டார்கள். விலை உயர்ந்த புடவைகளை அடிக்கடி கட்டி அழுக்குப் பண்ண வேண்டும் என்று ஒரு ஸ்திரீயும் விரும்ப மாட்டாள். அவற்றைப் பீரோவில் வைத்து அழகு பார்க்கவே எந்த ஸ்திரீயும் விரும்புவாள்.

ஆனால் சாதாரணப் புடவை யென்றாலோ அதற்கு நேர் எதிரிடை தான். அதைப் போட்டு

சாணிச் சுருணை யாட்டம் அழுக்குப் பண்ணு, பிறகு கல்லில் போட்டு அடி, கிழி, கேள்வி முறை கிடை யாது. தினந் தோறும் கட்டிக் கொள்ள இந்த சாதாரணப் புடவைகள் தானே உதவுகின்றன என்று அவற்றுக்கு ஏதாவது மரியாதை கொடுக் கிறார்கள் என்கிறீர்களா, அல்லது ஏதாவது அழகான பெயர் சொல்லித் தான் அழைக்கிறார் களா? நான்கு பெரிய மனிதர்கள் கண்ணில் அது படும்படி தான் விடுகிறார்களா? மாட்டார்கள்.

ஸ்திரீகள் தான் இப்படி, புருஷர்கள் இப்படி யல்ல என்று நினைத்துக் கொள்ளாதீர்கள். வண் ணானுக்குப் போய் விட்டு வந்த வேஷ்டி, அழுக்கு வேஷ்டி இரண்டும் இருக்கும் போது, வீட்டில் அந்த அழுக்கு வேஷ்டியைத் தான் இன்னும் கட்டிக் கட்டி அழுக்குப் பண்ணுவோமே யொழிய வண்ணா னுக்குப் போய் வந்த வேஷ்டியை எடுக்க மாட்டோம். அந்த வேஷ்டியை மெனுக்காக நான்கு பேர் பார்க் கத் தான் கட்டிக் கொள்வோம்.

இதைப் போலவே காரியாலயத்திலும் எவ்வள வுக் கெவ்வளவு ஒருவர் அதிகமாக வேலை செய் கிறாரோ அவ்வளவுக் கவ்வளவு அவரைத் தான் எல்லாரும் அதிகமாக விரட்டுவார்கள். இவரைப் பற்றி வெளியிலும் பெருமையாகச் சொல்லிக் கொள்ளமாட்டார்கள்.

ஆனால், " எங்காத்துக்காரரும் ஆபீசுக்குப் போகிறார் " என்று ஜம்பமாக போய் விட்டுத் தம்

தலையில் அதிகமாக வேலையை இழுத்து விட்டுக் கொள்ளாதவர்களைத் தான் காரியாலயத்தில் எல்லாரும் பாராட்டுவார்கள். இவரை ஏதாவது வேலை செய்யச் சொல்லுவதற்குக் கூட அஞ்சுவார்கள்.

"என்றைக்கும் கொடுக்காத மகாராஜி தான் கொடுக்க வில்லை; தினம் கொடுக்கும் மூதேவி கொடுப்பதற் கென்ன?" என்று சொல்வார்களே, அதைப் போல, வழக்கமாக அதிக வேலை செய்கிற வர்கள், ஒரு நாளைக்குக் குறைவாகச் செய்தால் சண்டைக்கு வருவார்களே யொழிய, வேலையே செய்யாமல் 'மெலுக்' காக இருந்து விட்டுப் போகிற வர்களை யாரும் குறை கூற மாட்டார்கள். இவர்கள் என்றைக்காவது ஒரு நாள், தப்பித் தவறி, ஞாபக மறதியில், இங்குள்ளதை அங்கு எடுத்துப் போட்டு விட்டால், அவர்களுக்குக் கிடைக்கும் பாராட்டுதல் களும், புகழ் உரைகளும் சொல்லி முடியா.

உலக இயற்கை இப்படி இருக்கும் போது அந்தக் காரியாலய மானேஜர் மட்டும் உலக இயற் கைக்குப் புறம்பாக நடப்பார் என்று தற்கால யுவர் கள் ஏன் நினைக்கிறார்களோ, தெரிய வில்லை.

ஆகவே, வேலை செய்தால் முன்னுக்கு வரலாம் என்ற எண்ணத்தை அறவே விட்டொழியுங்கள். நாம் வேலை செய்யச் செய்ய, மானேஜர் நம்மை விரட்டிக் கொண்டே யிருப்பாரே யொழிய மெச்ச மாட்டார். ஆனால் நாம் எத்தனைக் கெத்தனை

அலங்கார புருஷர்களாக விளங்குகிறோமோ, அத்தனைக் கத்தனை நம்மை மெருகு கெடாமல் பார்த்துக் கொள்வார். நம்மைப் பற்றி நாலு பேரிடம் பெருமையாகச் சொல்வார். நம் சம்பளத்தையும் கிடுகிடென்று உயர்த்துவார்.

ஆகவே காரியாலயத்தில் முன்னுக்கு வர வேலை செய்து பிரயோசனமில்லை. காரியாலயத்துக்கு அழகாக விளங்குவது தான் முக்கியம்.

---

## சினிமா டெக்னிக்

காரியாலயத்தில் முன்னுக்கு வர இன்னொரு வழி இருக்கிறது. அதைச் 'சினிமா டெக்னிக்' என்று கூறலாம். ஏனெனில் சினிமாவில் கையாளப்படும் ஒரு முக்கியமான கொள்கை தான் இதற்கு அடிப்படையாக விளங்குகிறது.

சினிமா, வாழ்க்கையைச் சித்தரிக்க வேண்டும், வாழ்க்கையைச் சித்தரிக்க வேண்டு மென்று அநேகர் அடிக்கடி சொல்வதைக் கேட்டிருப்பீர்கள். சினிமா வாழ்க்கையைச் சித்தரிக்க வேண்டியது தான், ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனல் அதற்காக வாழ்க்கையை அப்படியே அப்பட்டமாகப் படம் பிடிக்க வேண்டும் என்று அர்த்தமில்லை. ஏனெனில் அப்படிப் பிடித்தால் அது வாழ்க்கை யாகவே தோற்ற மளிக்காது. ஏன்? அது தான் இந்த மாயப் பிரபஞ்சத்தின் மர்மம்!

அதற்காக சினிமாக்காரர்கள் வாழ்க்கையைப் படம் எடுக்கவேண்டுமானல் வாழ்க்கையை அப்படியே படம் பிடிக்க மாட்டார்கள். வாழ்க்கையைப் போல பிரமை தட்டும் படியாகத் தான் பிடிப்பார்கள்.

இந்த 'டெக்னிக்', அதாவது உத்தியைத் தான் பிழைக்க விரும்புகிறவர்கள் கையாள வேண்டும். அதாவது காரியாலயத்தில் நாம் மிக

வும் அதிகமாக வேலை செய்வது போல் முதலாளிக்குத் தோற்ற மளிக்க வேண்டும். தோற்ற மளிக்க வேண்டுமே யொழிய, உண்மையில் வேலை செய்ய வேண்டு மென்கிற அவசிய மில்லை.

இந்த சினிமா 'டெக்னிக்'கை எப்படிக் கையாளுவது என்று நேயர்கள் கேட்கலாம்.

இந்த சினிமா 'டெக்னிக்' முறை என் நண்பர் சிவராமன் அவர்களுக்கு வெகு நன்கு தெரியும். சிவராமனும் நானும் ஒரே காரியாலயத்தில் தான் வேலை பார்த்து வந்தோம். நண்பர் சிவராமனுக்கு சினிமா 'டெக்னிக்' முறை வெகு நன்கு தெரிந்திருந்ததால் கிடு கிடென்று முன்னேறி இப்பொழுது முதலாளிக்கு அடுத்த படியான பதவி வகிக்கிறார். எந்தக் காரியத்துக்கும் முதலாளி அவரைத் தான் கூப்பிட்டனுப்புகிறார். காரியாலயத்தில் சிவராமன் வைத்தது தான் குடுமி, அவர் சிரைத்தது தான் மொட்டை!

ஆனால் நான், "நான் உண்டு, என் வேலை உண்டு" என்று இருந்து விட்டதால் 'பிரமோஷன்' கிடைக்காமல் ஆரம்பித்த சம்பளத்திலேயே இன்னும் இருந்து வருகிறேன். எல்லாம் பகவான் கவனித்துக் கொள்வார் என்று சில பெரியவர்கள் சொன்னார்கள். அவர்கள் சொன்னது என்னமோ ஒரு விதத்தில் உண்மைதான். சம்பள விஷயத்தில் பிரமோஷன் பண்ணாத பகவான் குழந்தைகள் விஷயத்தில் வருஷா வருஷம் 'பிரமோஷன்' கொடுத்துக் கொண்டு தான் வருகிறார். இது நிற்க.

சினிமா 'டெக்னிக்' முறை வெகு அவசியம் என்பது என் நண்பருக்குத் தெரிந்திருந்தது. நிறைய வேலை செய்வது போல் முதலாளிக்குப் பிரமை தட்ட வேண்டுமே யொழிய, உண்மையிலே நிறைய வேலை செய்ய வேண்டிய அவசியமில்லை என்பதை அவர் நன்கு உணர்ந்திருந்தார்.

இதற்காக என் நண்பர் ஒரு அழகான தந்திரம் கையாளுவார். முதலாளி காரியாலயத்துக்குள் தலையைக் காட்ட வேண்டியது தான் தாமதம், இவர் சில 'பைல்'களைத் தூக்கிக் கொண்டு, குடு, குடு என்று கிழக்கேயும், மேற்கேயும் ஓடுவார். யாராவது ஒருவர் மேஜை யண்டை போய் ஏதோ ஒரு விஷயத்தை விசாரிப்பார். அப்பொழுது சில பைல்களை அங்கு வைத்து "மறந்து விடுவார்." பிறகு இன்னொருவர் மேஜைக்குப் போய் அங்கேயும் இதே மாதிரி சில "பைல்" களை வைத்து "மறந்து விடுவார்." பிறகு "மறந்து வைத்த" "பைல்"களைத் தேடிக் கொண்டு இன்னொரு மேஜைக்கு ஞாபக மறதியாக ஓடுவார். அந்த மேஜை யண்டை சென்ற பிறகு தான் அங்கு வைக்க வில்லை, இன்னொரு மேஜையில் வைத்தோம் என்பது இவருக்கு ஞாபகம் வரும். இப்படியாகத் தானே குட்டி போட்ட பூனை போல் அவர் காரியாலயத்தில் குறுக்கும், நெடுக்கும் ஓடிக் கொண்டே யிருப்பார்.

அந்தக் காலத்தில் நான் அவரைப் பயித்தியக் காரர் என்று தான் நினைத்துக் கொண்டிருந்தேன். 'பைல்'களைத் தூக்கிக் கொண்டு போவதற்குத்

தான் பையன்கள் வைத்திருக்கிறார்களே, இவர் எதற்காகக் குடு, குடு என்று ஓடுகிறார், இதனால் வீண் கால நஷ்டமும், தேகப் பிரயாசையும் தானே ஏற்படுகிறது என்று தான் நினைத்தேன். ஆனால் இது தேகப் பயிற்சிக்குத் தேகப் பயிற்சி, பிழைக்கும் வழிக்குப் பிழைக்கும் வழி என்பது பின்னர் தான் தெரிந்தது.

நான் மாட்டில் மேஜை யண்டை உட்கார்ந்து என் வேலையை வெகு நன்கு தான் கவனித்துக் கொண்டிருந்தேன். இருந்தும் நான் ஓடியாடாத தால் எனக்கு வேலையில் அக்கரை இல்லை என்று முதலாளி நினைத்துக் கொண்டு விட்டார். நண்பர் சிவராமன் கிழக்கேயும், மேற்கேயும் ஓடியதால் அவர் வேலையில் மிகத் தீவிரமாக அக்கரை கொண்டவர் என்ற அபிப்பிராயம் அவருக்கு ஏற்பட்டு விட்டது.

'பைலா'னாலும் சரி, வேறு எதுவானாலும் சரி, அது அவசியமானாலும் சரி, அவசிய மில்லா விட்டாலும் சரி, அவரே ஓடிக் கொண்டிருந்ததால் காரியாலய பியூன்களுக்கும் அவர் மீது மிக்க சந்தோஷம். தங்களுக்கு வேலை வைக்க வில்லை என்பதால் அவர்களுக்குத் தாங்கொணா ஆனந்தம். ஆகவே சமயம் ஏதாவது ஏற்பட்டால், அவர்களே முதலாளியிடம் அவரைப் பற்றி பெருமையாகப் பேசுவார்கள்.

"நம்ப ஆபீஸில் சிவராமய்யாவுக்கு வேலையில் இருக்கிற அக்கரை வேறு யாருக்கும் கிடையாது,

ஸார். ஒரு பைலைக் கூட எங்கள் கையில் கொடுக்க மாட்டார் ஸார். தாம் தான் எடுத்துக் கொண்டு ஓடுவார், ஸார்" என்று சொல்லுவார்கள். ஏற்கெனவே சிவராமனைப் பற்றி முதலாளிக்கு உள்ள நல்லபிப்பிராயம் இன்னும் பலப்படும். சிவராமனின் சம்பளமும் கிடு, கிடென்று உயரும்.

நண்பர் சிவராமன் முன்னுக்கு வந்து, நான் முன்னுக்கு வராமல் இருந்ததற்கு இன்னொரு காரணமும் உண்டு. முதலாளிக்கு என்னால் என்ன காரியம் ஆக வேண்டி யிருந்தாலும் சரி, "பூ! இவ்வளவு தானே! இதோ செய்து முடித்து விடுகிறேன்" என்று சொல்லி விட்டு, செய்து முடித்தும் விடுவேன். பிறகு அதைப் பற்றி ஒன்றும் பேசவும் மாட்டேன்.

"என்ன ஸார், பாஸ்பேட் நாலு டன் வாங்கிப் போட்டால் தேவலையே" என்பார் முதலாளி. "அதற்கென்ன? ஷேக் அப்துல்லா சேட் எனக்குத் தெரிந்தவர் தான். அவரிடம் சொன்னால் காரியம் ஆகிறது" என்று அடுத்த கணமே ஷேக் அப்துல்லா சேட்டைப் போனில் கூப்பிட்டுக் காரியத்தை முடித்து விடுவேன்.

"ஐந்து டன் பேப்பர் அடுக்கி வைத்தால் தேவலையே!" என்பார் முதலாளி.

"அதற் கென்ன? நம்ப மணி இருக்கவே இருக்கிறார். அவரிடம் சொன்னால் காரியம் ஆகி விடுகிறது" என்று முதலாளிக்குச் சொல்லி விட்டு

மணியிடமும் சொல்லி விடுவேன். இதனால் என்ன ஆயிற்று என்றால் நான் சாதிக்கும் எல்லாக் காரியங்களும் முதலாளிக்கு எளிதாகவே பட்டது. அதில் என் சாமர்த்தியம் எதுவும் இருந்ததாக அவருக்குப் படவில்லை.

ஆனால் நண்பர் சிவராமன் என்னைப் போல் ஆளா, என்ன? முதலாளி சொல்லும் எந்தக் காரியத்துக்கும், "ரொம்ப சிரமப்படும் போலிருக்கிறதே, இருந்தாலும் எதற்கும் முயற்சி செய்து பார்க்கிறேன்" என்று பீடிகை போட்டுக் கொண்டு தான் அவர் பேச ஆரம்பிப்பார்.

"என்ன ஸார், பாஸ்பேட் நாலு டன் போட்டால் தேவலையே" என்று முதலாளி கேட்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். "இந்த யுத்த சமயத்தில் எங்கே ஸார் பாஸ்பேட் கிடைக்கிறது? இருந்தாலும் நான் வேண்டுமென்றால் விசாரித்துப் பார்க்கிறேன்" என்பார் சிவராமன்.

"என்ன ஸார்! இப்படிச் சொல்லுகிறீரே? மிக அவசரமாக வேண்டியிருக்கிறதே பாஸ்பேட். என்ன பண்ணுவது!" என்பார் முதலாளி.

"அது தான் நானும் யோசனை பண்ணிக் கொண்டிருக்கிறேன். ஒருவேளை ஷேக் அப்துல்லா சேட்டிடம் கிடைத்தாலும் கிடைக்கலாம். இருந்தாலும் அந்தப் பயல் லேசில் தரமாட்டான். நம்ப மாயாண்டித் தேவன் இருக்கிறார் பாருங்கோ, அவர் மூலமாக ஷேக் அப்துல்லா சேட்டைக் கண்டால் ஒரு வேளை காரியம் முடியுமோ, என்னமோ!"

" சரி மாயாண்டித் தேவன் மூலம் தான் அவரைப் பாருங்கள், சீக்கிரம்."

" மாயாண்டித் தேவன் ஊரில் இருக்கிறாரோ, இல்லையோ! அதிலும் அவர் ஒரு மாதிரிப் பேர் வழி. நேரடியாகப் போனால் சள்ளு புள்ளென்று விழுந்தாலும் விழுவார். அவர் மச்சினன் ஒருவர் இருக்கிறார். அவரைச் சரிப்படுத்தினால் தான் காரியம் நடக்கும்."

" சரி, அவர் மச்சினரையே பார்த்து, சட்டுப் புட்டென்று காரியத்தை முடியுமேன்."

" இல்லை, அவர் மச்சினர் திருச்சினாப்பள்ளியில் இருக்கிறார். வீணாக ரயில் செலவு ஆகுமே என்று தான் சற்று யோசித்தேன்."

" காரியம் ஆக வேண்டுமென்றால் ரயில் சார்ஜைப் பார்த்து முடியுமா? சீக்கிரமே திருச்சினாப் பள்ளிக்குப் போய் விட்டு வாருமே."

நண்பர் சிவராமன், என்னமோ காரியாலயத்துக்காகத் தம் வாழ்க்கையையே அர்ப்பணம் செய்து விட்டது போல் முகத்தை வைத்துக் கொண்டு திருச்சினாப்பள்ளிக்குப் போவார்.

திருச்சியில் இவர் அத்தைப் பெண்ணுக்குக் கல்யாணம். அதற்குப் போவதற்காகத் தான் இத்தனை சாமர்த்தியமாக ஷேக் அப்துல்லா சேட்டைப் பார்ப்பதற்கு மாயாண்டித் தேவனைப் பார்க்கவேண்டும், மாயாண்டியைப் பார்ப்பதற்கு அவர் மச்சினரை பார்க்க வேண்டும், அவர் மச்சினரைப் பார்ப்பதற்குத் திருச்சிக்குப் போக வேண்டும்

என்றெல்லாம் வளைத்து வளைத்துக் கூறியது.

நண்பர் சிவராமன் திருச்சியில் நான்கு நாள் கன குஷியாக முகாம் போடுவார். (இவர் அதிர்ஷ்டம், இவர் அத்தை பெண்ணுக்கு நான்கு நாள் கல்யாணம் நடக்கிறது). ஆனால் முதலாளியோ பாவம், இவர் காரியாலயத்துக்காகத் தான் மிகவும் கஷ்டப் பட்டுக் கொண்டிருக்கிறார் என்று நினைத்துக் கொண்டிருப்பார்.

சிவராமன் ஊரிலிருந்து திரும்பியதும் முதலாளி வெகு கவலையாக என்ன விசேஷம் என்று விசாரிப்பார். "அந்தப் பயல்களை ஒரு மாதிரி சரி பண்ணி விட்டு வந்திருக்கிறேன். விலை தான் ஒரு மாதிரி சொல்வார்கள் போல் தோன்றுகிறது. ரூபாய்க்கு இரண்டணா வீதம் இரண்டு நாளாக விலையை உயர்த்தியிருக்கிறார்களாம். ஆனால் பழைய விலைக்குத் தான் ரசீது கொடுப்பார்களாம்" என்று சொல்வார்.

இந்த ரூபாய்க்கு இரண்டணா கமிஷன் இவருக்குப் போகப் போகிறது என்பது முதலாளிக்கு எங்கே தெரியப் போகிறது?

இப்படியாக சிவராமன் எத்தனைக் கெத்தனை தாமதப் படுத்துகிறாரோ, அத்தனைக் கத்தனை அவர் மிகவும் பிரயாசைப்பட்டு வேலை செய்வதாக நினைத்து அவருக்கு முதலாளி சம்பள உயர்வு கொடுப்பார்.

---

## பூக்கடைக்கு விளம்பரம் தேவை

"பூக் கடைக்கு விளம்பரம் எதற்கு?" என்று நம் பெரியவர்கள் சொல்லி விட்டுப் போனது எனக்குப் பெரிய அனர்த்தமாகப் போய்விட்டது! வேலையைச் சரியாகச் செய்தால் தன்னைப் போல் முதலாளி பார்த்துக் கொள்கிறார் என்று நான், வேலை செய்வதாக விளம்பரம் செய்து கொள்வதில்லை. டாண் என்று மணிக் கணக்குக்கு ஆபீசுக்குப் போவேன், டாண் என்று மணிக்கணக்குக்கு ஆபீஸிலிருந்து திரும்புவேன்.

எனக்குக் கொடுத்த வேலையை டக், டக்கென்று ஒரு மணி நேரத்தில் முடித்து விட்டு, மீதி வேளையில் துப்பறியும் நாவல் வாசித்துக் கொண்டிருப்பேன். நான் மிகவும் சுறு சுறுப்பாக என் வேலையை முடித்து விடுவேனாதலால், முக்கால் வாசி நாட்களில் நான் துப்பறியும் நாவலை எடுத்து வைத்துக் கொள்வதற்கும், முதலாளி வருவதற்கும் சரியா யிருக்கும்.

நான் துப்பறியும் நாவல் வாசித்துக் கொண்டிருக்கிறேன் என்பதை முதலாளியும் கவனிப்பார். "பார்த்தாயா! இவர் எவ்வளவு சுறு சுறுப்பாக வேலையை முடித்து விட்டு நாவலை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டார்!" என்று தான் முதலாளி சந்தோஷப் படுவார் என்று நான் நினைத்தேன். ஆனால் வருஷா வருஷம், தொடர்ந்து, என்

சம்பளம் உயர்த்தப்படாமல் இருக்கவே தான் முதலாளி என்னைப் பற்றித் தவறுதலான அபிப்பிராயம் கொண்டு விட்டார் என்று தெரிந்தது. நான் வேலையைக் கவனிக்காமல் துப்பறியும் நாவலை வைத்துக் கொண்டு பொழுது போக்குவதாக அவர் நினைத்து விட்டார்!

ஆனால் நண்பர் சிவராமன் பூக் கடைக்கு விளம்பரம் தேவை என்னும் விஷயத்தை வெகு நன்கு அறிந்திருந்தார். தம் சினேகிதர்கள் யாரைக் கண்டாலும் சரி, அதிலும் முதலாளிக்கு வேண்டியவர்கள் என்று தெரிந்தால் சரி, அவர்களைக் கண்ட போதெல்லாம் தம் வேலைத் தொந்தரவைப் பற்றித் தான் பேசுவார்.

"என்ன சிவராமன்! என்ன வர, வர, கண்ணிலேயே காணறதில்லை!"

"எங்கே ஸார் ஒழியறது! வர, வர ஆபீஸ் வேலை தான் தலைக்கு மேல் இருக்கிறது. பாக்கி எவனும் பொறுப்பாக வேலையைச் செய்கிறது கிடையாது. அதனால் எல்லாவற்றையும் நாம் தான் கவனிக்க வேண்டி யிருக்கிறது."

"என்ன சிவராமன்! என்ன உடம்பு ஒரு மாதிரியாக இருக்காப் போலே தோண்றதே!"

"என்ன ஸார் பண்ணுகிறது? ஆபீஸ் வேலை எல்லாவற்றையும் நாம் தான் கவனிக்க வேண்டியிருக்கிறது. காலம்பர ஒன்பது மணிக்குப் போனால் ராத்திரி ஒன்பது மணிக்குத் தான் வீடு திரும்ப முடி

கிறது. அப்படித் தான் திரும்பினோம், சாப்பிட்டோம், தூங்கினோம் என்று உண்டா? கிடையாது. ஒரு கட்டு ஆபீஸ் 'பைல்' பார்த்துத் தொலைக்க வேண்டியிருக்கிறது."

"ஏன் ஸார், நீங்கள் ஒருவரே ஏன் இப்படிக் கஷ்டப் படுகிறீர்கள்? ஆபீஸில் உள்ள பாக்கிப் பேருக்கு வேலையைப் பகிர்ந்து . கொடுக்கக் கூடாதோ!"

"எங்கே ஸார், அவனவன் பொறுப்பாக வேலை செய்கிறான்? ஒன்றையும் நம்பி அவர்கள் கையில் ஒப்படைக்க முடிகிறதில்லையே!"

தாம் காணும் ஒவ்வொருவரிடமும் சிவராமய்யர் இந்த ரீதியில்தான் பேசுவார். அவர்களில் பாதிப் பேர் முதலாளிக்கு வேண்டியவர்களாக இருப்பார்கள். அவர்கள் முதலாளியைக் காணும் போது சிவராமனைப் பற்றிச் சொல்வார்கள்.

"என்ன ஸார்! உங்கள் ஆபீஸ் வேலை முழுவதையும் சிவராமன் அல்லவா செய்கிறாராம்? வீட்டுக்குக் கூட கத்தை கத்தையாகப் பைல்கள் எடுத்துக் கொண்டு போய்ப் பார்க்கிறார் என்று கேள்வி. இந்த மாதிரி இத்தனை நம்பிக்கையாக உழைப்பவர்களை இந்தக் காலத்தில் காண்பது அரிது, ஸார்" என்பார்கள்.

சிவராமனைப் பற்றி முதலாளி வெகு நல்ல அபிப்பிராயம் கொள்வார். சரி, அடுத்த தடவை அவருக்குச் சம்பள உயர்வு அதிகமாகவே கொடுக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொள்வார்.

நண்பர் சிவராமன் முன்னுக்கு வந்ததற்கு அவர் மனைவியும் ஒரு விதத்தில் உதவியாய் இருந்தாள் என்றே கூற வேண்டும். பாக்கிப் பேரைப் போல் சாயந்திரம் 5-30 மணி ஆனதும் வீட்டுக்காரர் எப்பொழுது ஆபீஸிலிருந்து திரும்பி வரப் போகிறார் என்று அவள் வாசல் கதவைக் கட்டிக் கொண்டு நிற்பதில்லை. தன் புருஷனுக்கு ஆபீஸில் வேலை இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, இரவு 9-30 மணிக்குத் தான் வருவார் என்று அவளுக்குத் தெரியும். எனவே சாயந்திரம் ஐந்து மணியானதும் புருஷனுக்குக் காபியும், டிபனும் வீட்டுப் பைய னிடம் கொடுத்து அனுப்பி விடுவாள். இந்தப் பையன் காப்பியும், டிபனும் கொண்டு வருவதற்கும், முதலாளி காரியாலயத்தை விட்டுப் புறப்படுவதற்கும் சரியா யிருக்கும். இதைப் பார்த்து விட்டு, முதலாளி சிவராமனுக்குத் தான் பாக்கி எல்லாரையும் விட வேலையும் ஜாஸ்தி, சிரத்தையும் அதிகம் என்று நினைத்துக் கொள்வார்.

ஆனால் சிவராமன் என்னமோ, குஷியாக விசிறிக் கடியில் உட்கார்ந்து கொண்டு, அரட்டை அடித்துக் கொண்டிருப்பார் என்பது உண்மை தான். ஆனால் என்னையும் யார் அப்படி அரட்டை யடிக்க வேண்டாம் என்று சொன்னார்கள்? அதனால் சிவராமன் முன்னுக்கு வந்து நான் முன்னுக்கு வராததில் ஆச்சரிய மில்லை.

முன்னுக்கு வர சிவராமன் இது எல்லாவற்றை யும் விட வெகு முக்கியமான வழி யொன்று கடைப்

பிடித்தார். அது தான் முதலாளியை அடிக்கடி வீட்டில் கண்டு சந்தித்தல். முதலாளியை அடிக்கடி வீட்டில் போய்ப் பார்த்தால், "என்னடா, இப்படித் தொந்தரவு செய்கிறான்" என்று கோபித்துக் கொள்ள மாட்டாரா என்று கேட்கலாம். ஒரு கணம் நீங்கள் முதலாளியின் ஸ்தானத்தில் வைத்துக் கொண்டு யோசித்தால், அவர் கோபித்துக் கொள்வாரா, அல்லது சந்தோஷப் படுவாரா என்பது நன்கு விளங்கும்.

முதலாளியா யிருந்தாலும் சரி, அல்லது வேறு யாராயிருந்தாலும் சரி, அவரவர்களுக்குத் தங்கள் மனைவி தங்களைப் பற்றி மிக உயர்வாக எண்ண வேண்டும் என்ற ஆசை கட்டாயம் இருக்கும். இதற்கு நம்மைத் தேடிக் கொண்டு யாராவது நான்கு பேர் அடிக்கடி நம் வீட்டிற்கு வந்து கொண்டிருக்க வேண்டும். வீட்டில் உள்ள ஸ்திரீகள் தங்கள் புருஷர்களைப் பற்றிப் பெருமையாக எண்ண வேண்டும் என்றால் இதை விடச் சிறந்த வழி கிடையாது.

வெகு தூரம் போக வேண்டாம். இந்த அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யரை எடுத்துக் கொள்ளுங்கள். அவரைப் பற்றி என் மனைவி சரஸ்வதிக்கு வெகு நல்ல அபிப்பிராயம். நானும் அவரைப் போல் இல்லையே என்ற வருத்தம் வேறு. இதற்குக் காரணம் தினம் அவரைப் பார்க்க ஒரு பத்து பேருக்குக் குறையாமல் வந்து கொண்டிருப்பது தான். எப்பொழுது பார்த்தாலும் அவர் வீட்டுத்

திண்ணையில் அவருக்காக நான்கு பேருக்குக் குறை யாமல் காத்துக் கொண்டிருப்பார்கள். "அண்ணு சாமி அய்யர் வருவதற்கு இன்னும் ஆறு நாழிகை பிடிக்கும்" என்று அண்ணுசாமி மனைவி சொன்ன லும் மனம் தளராமல் காத்திருப் பார்கள். "பரவா யில்லை அம்மா! எவ்வளவு நாழிகை யானலும் சரி, அவரைப் பார்த்து விட்டுத் தான் போகப் போகி ரேம்" என்பார்கள்.

இந்த மாதிரி வார்த்தைகள் காதில் விழும் போதெல்லாம் என் மனைவி சரஸ்வதி என்னைப் பழிக்க ஆரம்பித்து விடுவாள்.

"நீங்களும் இருக்கிறீர்களே! உங்களுக்கு இந்த மாதிரி இத்தனை ஆப்தமான சிநேகிதர்கள் உண்டா? அடுத்த வீட்டு அண்ணுசாமியின் சிநே கிதர்களைப் பாருங்கள். எத்தனை நாழியானலும் சரி, அவரைப் பார்த்து விட்டுத் தான் போவது என்று எத்தனை விஸ்வாஸமாக இருக்கிருர்கள்? இந்த மாதிரி உங்களைப் பார்க்க யாராவது ஒருவர் வருகிருர் களா? என்னமோ போங்கள், நீங்கள் இந்த மாதிரி இருப்பது எனக்குத் துளிக் கூடப் பிடிக்க வில்லை" என்பாள்.

அண்ணுசாமியின் "சிநேகிதர்கள்" எதற்காக அவரைப் பார்க்க வருகிருர்கள், அவரைப் பார்த்து விட்டுத்தான் போவோம் என்று பிடிவாதம் பிடிக் கிருர்கள் என்ற காரணத்தை நான் சரஸ்வதிக்குச் சொல்ல வில்லை. அந்த "சிநேகிதர்கள்" அத்தனை பேரும் அண்ணுசாமி அய்யருக்குக் கடன் கொடுத்

தவர்கள்! கொடுத்த கடனைத் திருப்பி வாங்குவதற் காகத் தான் அப்படி வீட்டில் பழியாகக் கிடக்கிறார் கள்!

ஆனால் அடிக்கடி நான்கு பேர் நம்மைத் தேடி வந்து கொண்டிருக்க வேண்டும் என்று சரஸ்வ திக்கு இருக்கும் ஆசையில், கடன் பட்டாலும் பரவாயில்லை, அப்படியாவது நான்கு பேர் நம்மைத் தேடி வந்து கொண்டிருக்கட்டும் என்று சொல்லி விடுவாளோ என்று கூடத் தோன்றுகிறது!

ஆகவே நாம் அடிக்கடி தம் வீட்டுக்கு வரு வதைக் கண்டு முதலாளி சந்தோஷப் படுவாரே யொழிய கோபித்துக் கொள்ள மாட்டார். எனவே நாம் அடிக்கடி முதலாளியின் வீட்டுக்குச் செல்ல வேண்டும். அப்படிச் செல்லும் போதெல்லாம் நாம் அங்கு செய்ய வேண்டிய முக்கிய காரியம் ஒன்று இருக்கிறது. இதைச் சரியாகச் செய்தோமோ, நாம் காரியாலயத்தில் முன்னுக்கு வருவதைப் பற்றி யாதொரு சந்தேகமும் கிடையாது.

அதுதான் நம் காரியாலயத்தில் உள்ளவர் களைப் பற்றி யெல்லாம் கோள் சொல்லுவது.

இப் புஸ்தகத்தை இவ்வளவு தூரம் வாசித் தவர்கள், "ஐயோ கோள் சொல்லலாமா? பாவ மல்லவா? புறஞ் சொல்லிப் பேயாகத் திரிய வேண் டாம் என்று நம் பெரியவர்கள் சொல்லி யிருக்கிறார் களே" என்றெல்லாம் கேட்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். நாமெல்லோரும் உலகத்தை உத்தா ரணம் பண்ணுவதற்காகப் பிறக்க வில்லை, பணம்

சம்பாதித்து முன்னுக்கு வருவதற்காகத் தான் பிறந்திருக்கிறோம் என்பது அவர்களுக்குத் தெரியும் என்று நம்புகிறேன்.

ஆனால் அவர்கள் இப்படி ஒரு வேளை பயப்படலாம், காரியாலயத்தில் உள்ளவர்களைப் பற்றிக் கோள் சொன்னால் முதலாளி ஏதாவது தவறுதலாக நினைத்துக் கொண்டு விட்டால் என்ன பண்ணுவது என்று.

ஆனால் இப்படிப் பயப்படத் தேவை யில்லை. ஏனெனில் ஒவ்வொரு முதலாளிக்கும் காரியாலயத்தில் உள்ள தம் சிம்பந்திகள் சரியாக வேலை செய்து கொண்டிருக்கிறார்களா, அல்லது வேலை செய்யாமல் அடுத்த சம்பளம் கிடைக்கும் நாளை எண்ணிக் கொண்டிருக்கிறார்களா என்ற பயம் இருந்து கொண்டிருக்கும்.

முதலாளி தாமே எல்லாரையும் கவனிக்க முடியும் என்பது கஷ்டம். ஆகவே இந்த சமயத்தில் நாம் போய் இன்னார் இப்படிச் செய்தார், அன்னார் அப்படிச் செய்தார் என்று சொன்னோமானால் முதலாளிக்கு நம் மேல் மெத்தச் சந்தோஷம் ஏற்படும். அவர் காரியங்களிலும், நலன்களிலும் நாம் பெரிதும் அக்கறை கொண்டிருக்கிறோ மென்று நினைத்துச் சந்தோஷப் படுவார்.

இது விஷயம் நம் சகபாடிகளுக்குத் தெரிந்தாலும் எத்தனையோ அநுகூலங்களுண்டு. அவர்கள் நம்மைக் கண்டு சற்று பயப்படுவதுடன் சற்று தூர விலகியே இருப்பார்கள். நம் வம்புக்கு வர

மாட்டார்கள். நம்மைப் பற்றி முதலாளியிடம் ஏதா வது தவறுதலாகச் சொல்ல நடுங்குவார்கள்.

ஆகவே காரியாலயத்தில் முன்னுக்கு வர அடிக்கடி முதலாளியின் வீட்டுக்குப் போய் வந்து கொண்டிருக்க வேண்டும். யார் இதைப் பற்றி என்ன சொன்னாலும் காதில் போட்டுக் கொள்ளா தீர்கள். நாளைக்கு முன்னுக்கு வரப் போகிறவர்கள் நீங்களா, அவர்களா?

---

## பெருமாள் மாடு

பெருமாள் மாடு (அழகர் கோவில் மாடு தான், வேறு ஏதோ என்னல் உண்டாக்கப்பட்ட சிருஷ்டி என்று நினைத்து விடாதீர்கள்!) பார்த்திருக்கிறீர்களா?...........என்ன, பெருமாள் மாடு மாதிரித் தலையை யாட்டுகிறீர்கள்? எனக்கு என்னமோ சந்தேகம் தான். நீங்கள் எங்கே பார்த்திருக்கப் போகிறீர்கள்.

பெருமாள் மாடு இருக்கிறதே, அது மாட்டுக்காரன் நோக்க மறிந்து தலையாட்டும். "இந்த அம்மாவா கொடுப்பாங்கோ? பூம், பூம்! அந்த அம்மாவா கொடுப்பாங்கோ? பூம், பூம்! சின்ன அய்யரா கொடுப்பாரு? பூம், பூம்! பெரிய அய்யரா கொடுப்பாரு? பூம், பூம்!" என்று பெருமாள் மாட்டுக்காரன் கேட்டுக் கொண்டே, "பூம், பூம்" போட்டுக் கொண்டே போவான். பெருமாள் மாடு இதற்கெல்லாம் தலையை அசைக்காமல் நிற்கும். ஆனல், "அதோ கோடியிலே நிற்கிறாங்களே, அந்தப் பெரியம்மாவா கொடுப்பாங்க" என்று மாட்டுக்காரன் கேட்கும் போது அது மாட்டுக்காரன் நோக்க மறிந்து, "ஆமாம் ஆமாம்" என்று தலையை யாட்டும்.

உலகில் பிழைக்க விரும்புகிற வர்களுக்கு இந்தப் பெருமாள் மாடு மாதிரித் தலையாட்டத் தெரிய வேண்டியது மிகவும் அவசியம்.

தினம் எத்தனையோ பேர் எத்தனையோ காரியங் களுக்காக நம்மை அபிப்பிராயம் கேட்பார்கள். "ஏன் ஸார், நான் பண்ணின இந்தக் காரியம் சரி தானே?" என்று காரியாலய மானேஜர் கேட்க லாம். "இந்தக் கட்டுரை எப்படி? இதற்கு முன்னல் இத்தனை அழகிய கட்டுரை நீ பார்த்ததுண்டா?" என்று நமக்கு மிகவும் நெருங்கிய நண்பர் தம் கட்டுரையைப் பற்றி அபிப்பிராயம் கேட்கலாம். "ஏன்னு உங்களைத்தானே! நான் கட்டிக் கொண் டிருக்கும் இந்தப் புதுப் புடவை எப்படி? எனக்கு மிகவும் நன்ருயிருக்கிற தோன்னே?" என்ற ஒரு கேள்வியை நம் சஹதர்மிணி போட்டு நம்மை எக்கச் சக்கமான ஒரு நிலைமையில் மாட்டி வைக்கலாம். "அந்த சம்மந்தி பிராமணனை இப்படித் தான் அவ மானப் படுத்த வேண்டும். ஏண்டா சரிதானேடா அம்பி" என்று தாயார் கேட்கலாம். இது மாதிரி எத்தனையோ பேர் எத்தனையோ காரியங்களைப் பற்றி நம்மை அபிப்பிராயம் கேட்கலாம்.

இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் பிழைக்கத் தெரியாதவர்கள் எக்கச் சக்கமாக மாட்டிக்கொண்டு ஆடு திருடின கள்ளனைப் போல் திரு திரு என்று விழிப்பார்கள். "அபிப்பிராயம் கேட்டவர்கள் கட் டாயம் இது விஷயமாக நம் உண்மையான அபிப் பிராயம் தான் விரும்புகிருர்கள். அந்த உண்மை யான அபிப்பிராயத்தைச் சொல்லா விட்டால் அவர் கள் திண்டாடிப் போவார்கள்" என்று நினைத்துக்

கொண்டு, எல்லாரிடமும் தங்கள் நிஜ அபிப்பிராயத்தைக் கூறிவிடுவார்கள்.

"நீங்கள் பண்ணின காரியம் ரொம்ப தப்பு ஸார்! இதனால் நீங்கள் பின்னால் மாட்டிக் கொண்டு முழிக்கப் போகிறீர்கள். பாருங்கள்" என்று ஆபீஸ் மானேஜரிடம் சொல்வார்கள். இதனால் ஆபீஸ் மானேஜருக்கு இவர்கள் மீது கோபம் தான் உண்டாகும். "ரொம்பத் தெரிந்தவர்கள் போல் சொல்ல வந்து விட்டார்கள்! இந்தப் பயல்களை நாம் கேட்டதே பிசகு! இவர்களுக்கு என்ன அபிப்பிராயம் சொல்லத் தெரியப் போகிறது? முட்டாள்கள்!" என்று அவர் நினைத்துக் கொள்வார்.

இது மாதிரியே இவர்கள் தங்கள் கட்டுரைகளைப் பற்றி அபிப்பிராயம் கேட்கும் நண்பர்களிடம், "கட்டுரை துளிக் கூட நன்றா யில்லையே! கட்டாயம் ஆசிரியர் இதைத் திருப்பி யனுப்பி விடுவார். ஆகவே வீணாகத் தபால் செலவு செய்யாதீர்கள்" என்று அவர்களுக்குத் தபால் செலவு லாபம் பண்ணிக் கொடுக்க மிக ஆவலாக இருப்பதாகக் காட்டிக் கொடுப்பார்கள்.

உண்மையிலேயே கட்டுரை மிகவும் பேத்தலாக இருக்கலாம். அதைப் பத்திரிகைக்கு அனுப்புவதால் தபால் செலவு நஷ்டத்தைத் தவிர வேறு ஒரு லாபமும் இல்லாமல் இருக்கலாம். இருந்தாலும் கட்டுரை எழுதியவருக்கு இந்த உண்மை கசப்பாகவே இருக்கும்.

"ரொம்பக் கிழித்து விட்டான். இவன் கட்டுரைகள் மாத்திரம் ரொம்ப உசத்தியாக்கும்!" என்று எண்ணிக் கொள்வார்கள்.

அதே மாதிரி மனைவி புதுப் புடவை கட்டிக் கொண்டு அபிப்பிராயம் கேட்கும்போது பிழைக்கத் தெரியாதவன், "ஐயய! உனக்குத் துளிக் கூட நன்றாகயில்லை. உனக்குப் பழைய சுங்குடிப் புடவைகள் தான் பொருத்தமாய் இருக்கின்றன" என்று சொல்லி விடுவான். அவ்வளவு தான். மனைவிக்கு வந்து விடும் புருஷன் மேல் கோபம். நம்மைக் கண்டால் புருஷனுக்குப் பிடிப்பதில்லை யென்றே நினைத்து விடுவாள்.

"உங்களுக்கு நான் கட்டிக் கொண்டால் பிடிக்குமா? உங்கள் தங்கை கட்டிக் கொண்டால் பிடிக்கும், உங்கள் தங்கை பெண் கட்டிக் கொண்டால் பிடிக்கும், உங்கள் அக்கா கட்டிக் கொண்டால் பிடிக்கும், உங்கள் அக்கா பெண் கட்டிக் கொண்டால் பிடிக்கும்..........." என்று இப்படி அடுக்கிக் கொண்டே போவாள்.

கடைசியில் புருஷன் ஏதாவது கோபமாக நாலு வார்த்தைகள் சொல்லுவான். இந்த நாலு வார்த்தைகளுக்குப் பதிலாக மனைவி நாற்பது வார்த்தைகள் சொல்லுவாள். இந்த நாற்பது வார்த்தைகள் சொல்லி முடிந்த பிறகும், போதாது என்று அவளுக்குத் தோன்றும். அதற்கு மேல் வார்த்தைகளும் சமயத்துக்கு ஞாபகம் வராது. உடனே உலகம் ஆரம்பித்தது முதற் கொண்டு ஸ்திரீகள்

தங்களுக் கென்றே பிரத்தியேக மாகக் கொண்டுள்ள அழுகை ஆயுதத்தைக் கையாள ஆரம்பித்து விடுவாள். இந்த ஆயுதத்துக்கு முன்னால் எந்தப் புருஷன் தான் என்ன செய்ய முடியும்? புருஷன் பாடு வெகு திண்டாட்டத்தில் முடியும் என்பதைத் தவிர வேறு அதிகமாக ஒன்றும் சொல்லத் தேவையில்லை என்று நினைக்கிறேன்.

ஆனால் பிழைக்கும் வழி தெரிந்தவர்கள் இப்படி யெல்லாம் அகப்பட்டுக் கொண்டு திண்டாட மாட்டார்கள். பெருமாள் மாடு மாதிரி எதிரியின் நோக்க மறிந்து தலையாட்ட அவர்களுக்கு நன்கு தெரியும்.

"ஏன் ஸார்! நான் பண்ணின இந்தக் காரியம் எப்படி?" என்று காரியாலய மானேஜர் கேட்கும் போதே அவர்கள் மானேஜரின் நோக்கத்தை அறிந்து கொண்டு விடுவார்கள். பொதுவாக யாரும் நம்மை அபிப்பிராயம் கேட்கும் போது, நம் அபிப்பிராயத்தைக் கேட்டு, அதன்படி நடப்பதற்காகக் கேட்க வில்லை என்பது அவர்களுக்குத் தெரியும். பொதுவாக எல்லாருமே எல்லா விஷயங்களைப் பற்றியும் தங்களுக்கென்று ஒரு தனி அபிப்பிராயம் கொண்டிருப்பார்கள். காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு என்பது போல, தாங்கள் போகிற வழி தான் சரி, தாங்கள் கையாளும் முறை தான் சரி என்று அழுத்தமான அபிப்பிராயம் கொண்டிருப்பார்கள். இந்த அபிப்பிராயம் தான் சரி என்று மற்றவர்களும் தலையாட்டினால் தான் இவர்

களுக்குத் திருப்தி. தலையாட்டா விட்டால் கோபம். ஆகவே தலையாட்ட மாட்டார்களா என்ற ஆசையுடன் தான் நம்மை அபிப்பிராயம் கேட்கிறார்கள் என்பது பிழைக்கும் வழி தெரிந்தவர்களுக்குத் தெரியும். ஆகவே, அவர்கள் அது தெரிந்து அதற்கேற்றாற் போல் தான் தலை யாட்டுவார்கள்.

"நீங்கள் செய்தீர்கள் பாருங்கள் ஸார், அது தான் ரொம்ப சரி" என்று மானேஜரைப் பார்த்துக் கூறுவார்கள். "உங்கள் கட்டுரையைப் போல இதுவரை நான் பார்த்ததே கிடையாது" என்று நண்பர்களிடம் சத்தியம் செய்வார்கள். (கட்டுரை மிகவும் அபத்தமாக இருந்தாலும் இந்த வார்த்தை பொருந்தும் என்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள்) "ஆஹா! இந்தப் புடவை உனக்கென்றே நெசவு செய்யப் பட்டது போல் அத்தனை பொருத்தமாக இருக்கிறதே!" என்று மனைவியின் புதுப் புடவையை புகழ்வார்கள்.

இப்படிப் பெருமாள் மாடு மாதிரி நோக்கமறிந்து தலையாட்டி வைப்பதால் இவர்களைக் கண்டால் எல்லாருக்கும் பிடிக்கிறது. எல்லாரும் இவர்களைப் போன்று நல்லவர்கள் கிடையாது என்று இவர்களைச் சூழ்ந்து கொண்டிருப்பார்கள். இவர்களின் செல்வாக்கு அதிகரிக்க ஆரம்பிக்கிறது.

"நமக்குச் சரி என்று படுகிற விஷயம் இவருக்குச் சரி யெனப் படுகிறது. அதனால் நமக்கு உள்ள கெட்டிக்காரத் தனம் இவருக்கும் இருக்கிறது" என்று மானேஜர் தீர்மானித்து இவர்

சம்பளத்தை உயர்த்துகிறார். “அசிகை, கிசிகை ஒன்றும் படாமல் நம்முடைய கட்டுரையைப் போல் இது வரை வந்ததே கிடையாது என்று சொல்கிறார் பார்த்தாயா! இவர் பெருந்தன்மையே பெருந் தன்மை!” என்று நண்பர் தீர்மானித்து இவருக்கு இன்னும் நெருங்கிய நண்பராகிறார். இவருக்கு எத்தனையோ வழிகளில் நன்றி யறிதலை வெளி யிட்டுக் கொள்ளுகிறார். மனைவியும், “நம் புருஷன் நம் மீது எத்தனை ஆசையாக இருக்கிறார், பார்த் தாயா!” என்று சந்தோஷப்பட்டு புருஷன் மனங் கோணதபடி குடித்தனத்தை நடத்துகிறாள்.

பெருமாள் மாடு மாதிரி எதிரியின் நோக்கம் அறிந்து தலையாட்டுவதில் இத்தனை அனுகூலங்கள் உள்ளன என்பது பிழைக்கும் வழி தெரிந்தவர் களுக்குத் தான் தெரியும்........என்ன சொல்கிறீர் கள்? நான்சொல்வது சரிதானே?....ஊம், அப்படித் தான் பெருமாள் மாடு மாதிரி தலையாட்ட வேண்டும். என்ன ஆச்சரியம்! பாதி புஸ்தகம் ஆவதற்குள் பிழைக்கும் வழி கற்றுக்கொண்டு விட்டீர்களே!

---

## ஆடையும், அலங்காரமும்

உலகில் பிழைக்க வேண்டுமானால் ஆடையும், அலங்காரமும், மிக, மிக அவசியம். ஆடையிலும், அலங்காரத்திலும் என்ன இருக்கிறது என்று பிழைக்கத் தெரியாதவர்கள் வேண்டுமானால் வேதாந்தம் பேசலாம். வெளி அழகு எதற்கு, உள்ளழகு தான் முக்கியம் என்று தர்க்க ரீதியாக எடுத்துக் காட்டலாம். ஆனால், பிழைக்கத் தெரியாத வர்கள் இப்படிப் பேசும் பேச்சைக் கேட்டு நீங்கள் ஏமாறுவீர்கள் என்று நான் நம்பவில்லை.

ஜனங்கள் மனிதனின் உள் தோற்றத்தைத் காணமல் வெளித் தோற்றத்தை மாத்திரம் கண்டு, அதைக் கொண்டு அவர்களை மதிப்பிடுகிறார்களே யென்றால் அவர்களைக் குற்றம் சொல்லிப் பிரயோ சனம் இல்லை. வெளித் தோற்றத்தைக் காணக் கூடிய சக்தி தான் பகவான் மனிதர்களுக்கு அளித் திருக்கிறாரே யொழிய, உள் தோற்றத்தைக் காணக் கூடிய சக்தி அளிக்கவில்லை.

உள்ளழகை விட வெளி அழகு தான் முக்கியம் என்கிற விஷயத்தைத் தற்கால வியாபாரிகள், அதிலும் குறிப்பாக, நகை வியாபாரிகள் வெகு நன்கு தெரிந்துவைத்திருக்கிறார்கள். நகை ஏதாவது வாங்க வேண்டுமென்று கடைக்குப் போங்கள். நகை வைக்கப்பட்டிருக்கும் நகைப்பெட்டி நகையை

விட பளப்பள வென்று கண்ணைப் பறிக்கும். நகை பிடிக்கா விட்டாலும் நகைப் பெட்டியின்மீது மோகம் கொண்டு நகை வாங்குகிறவர்கள் எத்தனையோ பேர்!

நகை நிர்மாணிப்பதை விட நகைப் பெட்டி நிர்மாணிப்பதில் தான் கடைக்காரர்கள் அதிக கவனம் செலுத்துகிறார்கள் என்பது என் அபிப்பிராயம். இந்தக் காலத்தில் ஒவ்வொரு கடைகளிலும் வைக்கப்பட்டிருக்கும் நகைப் பெட்டிகளைப் பார்க்கும் போது நகையை விட நகைப் பெட்டிக்கு அதிகம் செலவு ஆகியிருந்தால் ஆச்சரியப் படுவதற்கில்லை.

இந்த நகைப் பெட்டிக் கலை எவ்வளவு முன்னேற்றம் அடைந்துள்ளது என்பதற்கு சாட்சி என் நண்பர் ஒருவருக்கும், அவர் மனைவிக்கும் ஏற்பட்டு விட்ட மனஸ்தாபம் ஒன்றே போதும்.

நண்பரும், நண்பர் மனைவியாரும் வைர பேஸரி ஒன்று வாங்குவதற்காகக் கடைக்குப் போனார்கள். கடைக்காரன் பேஸரியை வெல்வெட் மெத்தை தைக்கப் பட்டிருந்த ஒரு அழகான பெட்டியில் வைத்திருந்தான். பெட்டியைக் கண்டதுமே நண்பர் அந்தப் பெட்டியின் அழகில் மயங்கி விட்டார். "ஐயோ, நாம் பெண்ணாகப் பிறக்காமல் போய் விட்டோமே" என்று கூட ஒரு கணம் நினைத்தார் என்றால் மிகையாகாது.

நகைப் பெட்டி திறக்கப் பட்டு அதில் உள்ளேயிருந்த பேஸரியைக் கண்டதும் சந்தோஷத்தால்

துள்ளிக் குதித்தார். "ஆஹா! பேஸரி என்ன அழகு! என்ன அழகு!" என்று சிலாகித்தார். கடைசியில் கடைக்காரன் சொன்ன விலையைக் கொடுத்து வாங்கிக் கொண்டு வீடு திரும்பினர்.

ஆனல் வீடு திரும்பினதும் நண்பருக்கு பெரிய ஏமாற்றம் காத்திருந்தது! பேஸரியை மனைவியின் மூக்கில் போட்டார். ஆனல் பேஸரி சோபிக்கவே யில்லை. அழகாகவே காணப்படவில்லை. நண்ப ருக்குச் சந்தேகம் வந்துவிட்டது. கடையில் அத்தனை அழகாகக்காணப்பட்ட பேஸரி, மனைவியின் மூக்கில் ஏறியதும் அழகாகவே இல்லையே, பேஸரியில் ஏதோ சூது இருக்க வேண்டும் என்று நினைத்தார். உடனே போய்க் கடைக்காரனிடம் நகையைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, அவனுடன் சண்டை பிடிக்க வேண்டியது தான் மறு காரியம் என்று தீர்மானித்து பேஸரியைக் கழற்றி அதன் பெட்டி யில் வைத்தார். என்ன ஆச்சரியம்! பேஸரி திரும்ப வும் முன்போல் ஜ்வலிக்க ஆரம்பித்தது!

நண்பருக்குத் தம் கண்களை நம்ப முடியவில்லை. அத்தனை அழகான பேஸரியையா நாம் அழகில்லை யென்று நினைத்தோம் என்று பேஸரியைத் திரும்ப வும் தம் மனைவின் மூக்கில் போட்டார். என்ன ஆச்சரியம்! சற்று முன்னல் வானத்து நட்சத்திரத் தைப் போன்று ஜ்வலித்த பேஸரி ஏதோ ஈயத் தகடைப் போல் காணப்பட்டது. நண்பருக்குத் திரும்பவும் கடைக்காரன் மீது சந்தேகம் வந்து

விட்டது. திரும்பவும் பேஸரியைக் கழற்றி பெட்டியில் வைத்தார். பெட்டியில் வைக்கப்பட்டது தான் தாமதம், பேஸரி முன்போல் ஜ்வலிக்க ஆரம்பித்தது!

இந்த மாதிரி பத்துப் பதினைந்து தடவை பெட்டியிலிருந்து மூக்கிற்கும், மூக்கிலிருந்து பெட்டிக்கும் மாறி மாறி பேஸரி பிரயாணம் செய்துகொண்டிருந்தது. பேஸரி இந்த மாதிரி பிரயாணம் செய்யச் செய்ய, நண்பருக்குக் கொஞ்சம் கொஞ்சமாகத் தம் மனைவியின் மூக்கின்மீது கோபம் ஏற்பட ஆரம்பித்து விட்டது. கடைசியில் தம் மனைவியின் மூக்கைப் பழித்துக் கூறக் கூட ஆரம்பித்து விட்டார்! நகைப் பெட்டிக்கு இருக்கும் அழகு தம் மனைவியின் மூக்குக்கு இல்லையே என்று வருத்தப் பட்டுக் கொண்டார். இதன் காரணமாக இருவருக்கும் மனஸ்தாபம் ஏற்பட நண்பரின் மனைவியார், கோபித்துக் கொண்டு பிறந்த வீட்டுக்குப் போய் விட்டார் என்றால், இந்தக் காலத்து நகை வியாபாரிகள் நகைப் பெட்டிகள் நிர்மாணிப்பதில் எவ்வளவு கைதேர்ந்தவர்கள் என்று நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்.

இந்தக் காலத்தில் வெளித் தோற்றந்தான் அவசியம், உள் தோற்றத்தைப் பற்றிக் கவலையில்லை என்பதை நகை வியாபாரிகள் மாத்திரம் அல்ல, கிட்டத் தட்ட எல்லாருமே தெரிந்து வைத்திருக்கிறார்கள்.

இந்த காப்பி ஹோட்டல்களை எடுத்துக் கொள்ளுங்கள். ஒரு ஹோட்டல் நல்ல ஹோட்டல், அல்லது மட்ட ஹோட்டல் என்பதை அதில் கிடைக்கும் உணவு வகைகளைக் கொண்டு எத்தனை பேர் மதிப்பிடுகிறார்கள் என்று நினைக்கிறீர்கள்?

ஹோட்டல் கட்டிடம், அதில் போடப்பட்டிருக்கும் மேஜை நாற்காலிகள், சுவரில் மாட்டப்பட்டிருக்கும் கண்ணாடிகள், படங்கள், ஹோட்டல் பீங்கான் தட்டுகளிலும், கோப்பைகளிலும் போடப்பட்டிக்கும் பூ வர்ண வேலைப்பாடுகள், ஹோட்டல் 'ஸர்வர்'களின் உடை இவற்றைக் கொண்டு தான் ஜனங்கள் ஹோட்டல் தின் பண்டங்களின் ருசியையும், சுத்தத்தையும் மதிப் பிடுகிறார்களே யொழிய அவற்றைச் சாப்பிட்டுப் பார்த்தல்ல.

ஹோட்டலில் உணவு வகைகளை எவ்வளவு அசுத்தமாகத் தான் செய்யட்டும், அது வைக்கப்பட்டு கொண்டு வரப்படும் பீங்கான் பிளேட் கண்ணுக்குப் பார்ப்பதற்கு அழகாய் இருந்தால், இதைப் போன்று சுத்தமாகவும், நேர்த்தியாகவும் தயாரிக்கப்பட்ட தின் பண்டங்களைத் தங்கள் வாழ்க்கையில் கண்டதே யில்லை யென்று ஜனங்கள் சத்தியம் செய்வார்கள்.

இதே போன்று, எவ்வளவு சுத்தமாகவும், நேர்த்தியாகவும் தான் தின்பண்டங்கள் தயாரிக்கப்பட்டிருக்கட்டும், அழகில்லாத பிளேட்டுகளில்

கொண்டு வரப்பட்டால் சுத்தமில்லை, நேர்த்தி யில்லை என்று தான் ஜனங்கள் கூறுவார்கள்.

இதற்காக ஜனங்களைக் குற்றம் சொல்லியும் பிரயோசன மில்லை. ஆள் நல்லவன் அல்லது கெட்டவன் என்பதை அவர்கள் உள்ளே புகுந்து பார்க்க முடியுமா, என்ன? ஆள் நடை, உடை, பாவனை முதலியவற்றைக் கொண்டு தான் தீர்மானிக்க வேண்டியிருக்கிறது.

டாக்டர் போல் உடை தரித்தால் டாக்டர் என்று நினைக்கிறார்கள். வக்கீல் போல் உடை தரித்தால் வக்கீல் என்று நினைக்கிறார்கள். குமாஸ்தா போல் உடை தரித்தால் குமாஸ்தா என்று நினைக்கிறார்கள்.

இதைப் போலவே மேதாவி போல் உடை தரித்தால், பிறர் கண்டு மேதாவி என்று தான் நினைக்கத் தோன்றுகிறது. கெட்டிக்காரன் போல் உடை தரித்தால் கெட்டிக்காரன் என்று தான் நினைக்கத் தோன்றுகிறது.

உடையைக் கண்டு ஜனங்கள் மிரளுகிறார்கள் என்பதற்கு இந்தப் போலீஸ்காரன் உடை ஒன்று போதும். போலீஸ்காரன் தலைப்பாகை வெறும் சிவப்புத் துணியால் ஆனது தானே? அந்த சிவப்புத் தலைப் பாகையைக் கண்டாலே ஜனங்கள் எதற்காக இப்படி நடுங்குகிறார்கள்?

நான் தெருக்களில் சைக்கிளில் போகும்போது சிவப்புத் தலைப்பாக்காரன் என்னை வெறுமனே

அரைக் கணம் பார்த்தாலும் போதும், உடனே எனக்கு நூற்றெட்டு சந்தேகங்களும், பயங்களும் கிளம்பி விடும். எண்ணாத எண்ண மெல்லாம் எண்ணி, எண்ணி என் ஏழை நெஞ்சம் புண்ணாக ஆகிவிடும்.

"இந்த சிவப்புத் தலைப்பாக்காரன் ஏன் என்னையும், என் சைக்கிளையும் இப்படிப் பார்க்கிறான்? என் சைக்கிள் பிரேக் சரியாக இல்லையா, என்ன? இல்லை, நான் சைக்கிளை இடது பக்கத்தில் ஓட்டுவதற்குப் பதில் வலது பக்கத்தில் ஓட்டிக் கொண்டிருக்கிறேனா, என்ன? இல்லை, சைக்கிளைத் தான் குறிப்பிட்ட வேகத்துக்கு மேல் ஓட்டிக் கொண்டு வருகிறேனா, என்ன?"

இப்படி யெல்லாம் என் மனது படாத பாடு படும். போலீஸ்காரனைத் தாண்டி அவன் கண்ணுக்கு மறைகிற வரைக்கும் என் நெஞ்சு திக்கு, திக்கென்று அடித்துக் கொண்டிருக்கும்.

அத்தனைக்கும் போலீஸ்காரன் என்னைப் பார்த்திருக்க மாட்டான். எனக்குப் பின்னால் வந்த ரிக்ஷாக்காரனைப் பார்த்ததை என்னைப் பார்த்த தாக நான் நினைத்துக் கொண்டிருப்பேன்!

போலீஸ்காரன் கிடக்கட்டும், இந்த நாலு முழ கதர் வேஷ்டிக்கும், கதர் ஜிப்பாவுக்கும் உள்ள மகிமையைச் சொல்லுங்கள்! எவ்வளவு அயோக்கியனாய் இருக்கட்டும், இந்த நாலு முழ கதர் வேஷ்டியும், கதர் ஜிப்பாவும் அணிந்து கொண்டு விட்டானானால்

அவனைப் பற்றி என்னவெல்லாம் நினைக்கிறோம்! உலகத்தையே வெறுத்து, வாழ்க்கையை அப்படியே தேசத்துக்காகத் தியாகம் செய்து விட்டவன் போல் அல்லவோ அவன் தோற்ற மளிக்கிறான்! அவனைப் பார்க்கும் போதே, "ஐயோ பாவம்! எத்தனை போலீஸ் தடியடி வாங்கி யிருப்பானோ, எத்தனை வருஷ சிறைவாசம் செய்திருப்பானோ" என்றல்லவா நமக்கு நினைக்கத் தோன்றுகிறது! அவனைப் பார்த்தாலே பரம யோக்கியன் போல் நம் கண்ணுக்குப் படுகிறது. அவனை எத்தனை ரூபாய்க்கும் நாம் நம்பத் தயாராய் இருக்கிறோம். அவன் பொய்யே சொல்ல மாட்டான் என்று நமக்குத் தோன்றுகிறது.

ஆகவே ஆடைக்கு இருக்கும் மதிப்பை அள விட முடியாது. இது விஷயம் நம் முன்னோர்களுக்கும் தெரிந்திருந்தது என்பதற்கு ஒரு பிரபு வீட்டுக் கல்யாணத்துக்கு ஒரு பெரியவர் சென்றாரே அந்தக் கதை போதும்.

பெரியவர் முதலில் சாதாரண உடை உடுத்திக் கொண்டு கல்யாணத்துக்குப் போனார். ஆனால் வாசலில் இருந்த சேவகர்கள் அவரை உள்ளே விட மறுத்து விட்டனர். அவர் உடையைப் பார்த்து விட்டு யாரோ சாதாரண மனிதர் என்று நினைத்துக் கொண்டு சேவகர்கள் உள்ளே விட மறுத்து விட்டனர். இதைத் தெரிந்து கொண்டார் பெரியவர். உடனே எங்கேயோ போய் நல்ல உடைகளாக இரவல் வாங்கிப் போட்டுக் கொண்டார். கல்யாணத் துக்குப் போனார்.

அப்பொழுது சேவகர்களும், கல்யாணத்துக்கு வந்திருந்தவர்களும் இவரை வெகு மரியாதையாக வரவேற்று, ராஜோபசாரம் செய்வித்தார்கள். இவருக்குப் பெரிய தலை வாழை இலையாகப் போட்டு சாப்பாடு பரிமாறினார்கள்.

" துணி இரவல் வாங்கிப் போட்டுக் கொண்டாலும் போதும்; உலகம் மரியாதை செய்யத் தயாராகக் காத்துக் கொண்டிருக்கிறது. வேறு ஒன்றும் நம்மிடமிருந்து அதிகமாக எதிர் பார்க்கவில்லை. ஆடை அழகாக இருந்தால் போதும் என்கிறது" என்று பெரியவர் சந்தோஷப் படக்கூடாதோ? இல்லை. அதற்குப் பதில் கலத்தில் பரிமாறப் பட்ட அன்னத்தை எடுத்துத் தம் உடை மீது கொட்டிக் கொண்டாராம். ஏன் இப்படிச் செய்தார் என்று விசாரித்த போது, நடந்த விவரத்தை யெல்லாம் கூறி, " இந்த ஆடைக்குத் தான் மரியாதை, எனக்கில்லையே" என்று கூறினாராம்.

இந்தப் பழங்காலத்துக் கதையை இதுவரையில் எல்லாரும் தப்பிதமாகவே அர்த்தம் பண்ணி வந்திருக்கிறார்கள். ஆடையைப் பார்த்து உலகம் மயங்குவதைப் பழிப்பதற்காகத்தான் இக்கதை ஏற்பட்டது என்று நினைக்கிறார்கள். இது மிகவும் தவறு. கதை ஏற்பட்டதின் கருத்து இதுவே அல்ல, பின் வருவதே ஆகும்.

உலகில் பெயரும், புகழும் அடைய வேண்டுமானால் மிகவும் கெட்டிக்காரனாய்த் தான் இருக்க

வேண்டும் என்கிற அவசியம் இல்லை. மிகுந்த சாமர்த்தியமோ, கெட்டிக்காரத் தனமோ இல்லாமலே எல்லாருமே பெயரும், புகழும் அடையலாம். இதற்குத் தெரிந்திருக்க வேண்டியதெல்லாம், ஆடம்பரமாக ஆடை அணிந்து கொள்ளத் தெரிந்திருக்க வேண்டியதுதான். இதற்குப் பிரதி உபகாரமாக இந்த ஆடை உங்களை ஒன்றும் கேட்காது. சோற்றைக் கொண்டா, தண்ணீரைக் கொண்டா என்று கூடக் கேட்காது.

இதுதான் அக் கதையின் பொருள். உலகில் புகழ் இத்தனை சுலபமாகக் கிடைக்கும்போது, இந்த வழியை நீங்கள் ஏன் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது, கேட்கிறேன்.

ஆடையிலும், அலங்காரத்திலும் எவ்வளவோ அனுகூலம் இருக்கிறது. பிழைக்கும் வழிகளில் இதுவும் ஒன்று என்று இதற்குள் தெரிந்து கொண்டிருப்பீர்கள். இருந்தாலும் இன்னும் ஒரு உதாரணம் கூறிவிட்டு, இந்த அத்தியாயத்தை முடிக்கலாம் என்று பார்க்கிறேன்.

இப்பொழுது எங்கே பார்த்தாலும் ராணுவ ஆடை மயமாகவே இருப்பதைக் காண்கிறோம். இருந்தாலும் இந்த ஆடைக்கு இருக்கும் மதிப்பு எவ்வளவு என்பதை ஒரு கணம் யோசித்துப் பார்த்தீர்களா? ரயில் வண்டிகளில் ராணுவ உடை தரித்தவர்களைக் கண்டால் நாம் பயந்து கொண்டு இன்னொரு வண்டியில் தான் புளி மூட்டை அடைகிற மாதிரி

அடையத் தோன்றுகிறதே யொழிய அவர்களை இடம் விடும்படி கேட்கத் தோன்றுவதில்லை. நமக்கு மிகவும் தெரிந்த ஆசாமியாகவே இருக்கலாம். இருந்தாலும் அவர்களை ராணுவ உடையில் பார்க்கும் போது, அவர்களைக் கண்டு பேசுவதற்கு நமக்குச் சற்று பயமாகத்தான் இருக்கிறது.

வெகு தூரம் போகவேண்டாம். எங்கள் வீட்டில் முத்து என்று ஒரு பையன் வேலையாக இருந்தான். சம்பளம் பத்து ரூபாயோ என்னமோ கொடுத்துக் கொண்டிருந்தோம். "என்னடா பயலே!" என்று கூப்பிட்டால் கதறிக்கொண்டு ஓடி வருவான். அப்படி இருந்த பயல் இப்பொழுது மிலிடரியில் சேர்ந்து, காக்கி சட்டையும் காக்கி நிஜாரும் போட்டுக்கொண்டு விட்டான். இப்பொழுது அவனைப் பார்த்தால் எனக்கே பயமாய் இருக்கிறது. "என்னப்பா முத்து!" என்று கூப்பிட்டால் கூடச் சண்டைக்கு வந்து விடுவானோ என்று பயமாய் இருக்கிறது. இப்பொழுது நீங்களே சொல்லுங்கள், ஆடையினால் ஒரு தனி மதிப்பும், கௌரவமும் ஏற்படுகிறதா, இல்லையா?

---

## படித்தவனுக்கு அடையாளம்

படித்தவர்களுக்கு மரியாதை கிடைத்த தெல்லாம் பழங்காலம், இந்தக் காலத்தில் படித்தவர்களுக்கு மரியாதை கிடையாது என்று பொதுவாக ஜனங்கள் சொல்லி வருகிறார்கள். இது சுத்தப் பொய். இதற்கு அர்த்தமென்ன வென்றால் பிறர் படித்திருந்தால் அதைக்காண எங்களுக்குப் பிடிக்க வில்லை, அவர்களுக்கு மரியாதை யளிக்க நாங்கள் தயாராயில்லை, ஆனால் பிறர் நாங்கள் படித்தவர்கள் என்று எண்ணிக்கொள்ள வேண்டும் என்பதுதான்.

அது என்னமோ தெரியவில்லை, படித்தவர்கள், படியாதவர்கள் எல்லாருக்கும் தாங்கள் படித்தவர் என்று பிறருக்குக் காட்டிக் கொள்ள வேண்டும் என்ற ஆசை மிகவும் இருக்கிறது. இதில் சந்தேகமே யில்லை.

ஒரு காலத்தில் மூக்குக் கண்ணாடிகளுக்கு இருந்த மவுசு ஒன்று போதும், இது விஷயத்தை நிரூபிப்பதற்கு. படித்தவர்கள் எல்லாம் கண்ணாடி போட்டுக்கொள்ள ஆரம்பித்ததும், படிக்காதவர்கள் கூட தாங்களும் வெறும் கண்ணாடி போட்டுக் கொள்ள ஆரம்பித்து விட்டனர். எத்தனை பேர் கண்ணாடி போட்டுக்கொண்டு போட்டோ எடுத்துக் கொள்ள ஆசைப்பட்டனர் என்கிறீர்கள்! ஆனால்

கண்ணுடி போட்டுக்கொண்டு போட்டோவில் உட்கார்ந்தால் நிழல் படும். அதற்காக பிரேமை மாத்திரம் மாட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதை நீங்கள் கவனித்திருக்கலாம்.

எல்லா ஜனங்களும் பௌண்டன் பேனு மாட்டிக்கொள்ள ஆரம்பித்ததும் இந்த காரணத்தினுல் தான். படித்தவர்கள் எழுதுவதற்கு பௌன்டன் பேனு எந்த சமயத்திலும் வேண்டி யிருக்கும் என்று சட்டைப் பையில் மாட்டி வைத்துக்கொள்ளத் தொடங்கினுர்கள். இதைப் பார்த்துவிட்டு, படிக்காதவர்களும், பிறர் தங்களைப் படித்தவர்கள் என்று நினைத்துக்கொள்ள வேண்டும் என்று பௌன்டன் பேனு மாட்டிக்கொள்ள ஆரம்பித்தனர்.

மூக்குக் கண்ணுடியும், பௌன்டன் பேனுவும் இருக்கட்டும், ஜனங்கள் போட்டோ எடுத்துக்கொள்கிருர்களே, அதைக் கவனியுங்கள். ஆளுக்குப் பின்னுல் புஸ்தக அலமாரியோ, அல்லது கைக்கடியில் ஒரு அடுக்குப் புஸ்தகமோ இல்லாமல் போட்டோ எடுத்துக் கொள்ளுகிறவர்கள் எத்தனை பேர் என்கிறீர்கள்! நூற்றுக்கு இரண்டு அல்லது மூன்று பேர் இருந்தால் அதிகம்.

இதிலிருந்தே தாங்கள் படித்தவர்கள் என்று காட்டிக் கொள்ள ஜனங்கள் மிகவும் ஆசைப்படுகிருர்கள் என்று தெரியவில்லையா! ஆகவே உலகில் பிழைக்க வேண்டுமானுல் எல்லாரும் நம்மைப் பார்த்

துப் படித்தவன் என்று நினைத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்ல வேண்டியதில்லை. இதற்கு, முன்னே சொன்ன உபகரணங்களான மூக்குக் கண்ணாடி, பௌன்டன் பேனா, புஸ்தகங்கள் முதலியன மிகவும் அவசியம்.

படித்தவன் என்று பிறர் உங்களைப் பார்த்து நினைத்துக்கொள்ள வேண்டுமானால் அதற்கு நீங்கள் வீட்டில் அலமாரி நிறையப் புஸ்தகங்கள் வைத்திருக்க வேண்டும். "ஐயோ, அலமாரி நிறையப் புஸ்தகங்களா! புஸ்தகம் வாங்க பணத்துக்கு எங்கே போவது?" என்று கேட்காதீர்கள்.

அசடுகள் தான் பணம் கொடுத்துப் புஸ்தகம் வாங்குவார்கள். கெட்டிக்காரர்கள் பணம் கொடுத்துப் புஸ்தகங்கள் வாங்கமாட்டார்கள், இரவல் தான் வாங்குவார்கள். "கட்டினவனுக்கு ஒரு வீடு, கட்டாதவனுக்குப் பல வீடு" என்று சொல்லுவார்கள். அதைப் போலவே பணம் கொடுத்து வாங்குகிறவனைவிட, இரவல் வாங்குகிறவனுக்குப் புஸ்தகங்கள் நிறையச் சேரும்.

நாம் போகும் இடங்களில் எல்லாம் நண்பர்கள் புஸ்தகங்கள் நிறைய வைத்துக் கொண்டு தான் இருக்கிறார்கள். அவர்கள் பத்து இருபது புஸ்தகம் வைத்திருக்கிற இடத்தில் நாலைந்து புஸ்தகங்கள் குறைந்து போனதால் அவர்கள் கவலைப்படப் போவதில்லை.

நண்பர்கள் யாரைப் பார்க்கப் போனாலும் முதலில் அவர்கள் புஸ்தக அலமாரியை முற்றுகை இடுங்கள். யுத்தத்தில், ஒரு இடத்தைத் தாக்கு வதற்கு முன்னர், நிலைமை எப்படி இருக்கிறது என்று தெரிந்து கொள்வதற்காக வேவு பார்ப்பது உண்டு. அதைப்போலவே நீங்களும் முதலில் புத்தக அலமாரியை ஒரு கண்ணோட்டம் விடுங்கள். இதில், நண்பரிடம் என்னென்ன புஸ்தகங்கள் இருக்கின்றன, உங்களுக்கு என்னென்ன புஸ்தகங் கள் தேவை என்பது தெரிந்துவிடும். பிறகு நண் பரைப் பார்த்து, "அடே! இந்தப் புஸ்தகம் உங் களிடம் இருக்கிறதா? இத்தனை நாளாக எனக்குத் தெரியாமல் போச்சே" என்று ஒரு வெடி குண் டைத் தூக்கிப் போடுங்கள்.

வெடி குண்டைக் கண்டதும் நண்பர் பயந்து விடுவார்! ஒரு அசட்டுச் சிரிப்பு சிரிப்பார். எதிரி தற்காப்புகள் மிக பலஹீனமான ஸ்திதியில் இருக் கின்றன என்று இதற்கு அர்த்தம். இதுதான் சமயமென்று விடாமல், நீங்கள், எதிரியைத் தொடர்ந்து தாக்கவேண்டும்.

"இந்தப் புஸ்தகங்களைக் கொஞ்சம் கொடுங் கள். படித்து விட்டுத் தருகிறேன்" என்று சொல்லுங்கள். நண்பர் மாட்டேன் என்று சொல்ல மாட்டார். சரி என்று புஸ்தகங்களைக் கொடுப்பார். நீங்களும் புஸ்தகங்களை எடுத்துக் கொண்டு போங் கள். ஆனால் படிக்கவும் வேண்டாம், திருப்பித் தர

வும் வேண்டாம். பேசாமல் உங்கள் புஸ்தக அலமாரியில் அலங்காரமாக வைத்து விடுங்கள். (அலமாரி யாரும் இரவல் தர மாட்டார்கள். நீங்களே தான் வாங்கியாக வேண்டும்.)

இது மாதிரி இரவல் வாங்கியே புஸ்தகங்கள் சேர்ப்பதால் இரண்டு வித அனுகூலங்கள் உள்ளன. இதனால் உங்கள் புஸ்தக அலமாரியைப் பார்வையிடுகிறவர்கள் மட்டும் அல்ல, உங்களுக்குப் புஸ்தகம் இரவல் கொடுத்தவர்களும் உங்களைப் பெரிய படிப்பாளிகள் என்றே நினைத்துக் கொண்டிருப்பார்கள். உங்களைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் அவர்கள் மனக் கண்ணுக்கு தாங்கள் இரவல் கொடுத்த புஸ்தகங்களே ஞாபகம் வரும்.

உங்களைப் பார்க்கும் போதெல்லாம் நீங்கள் அந்தப் புஸ்தகங்களைக் கரைத்துக் குடித்து விட்டதாகவே நினைத்துக்கொண்டு அவர்கள் பேசுவார்கள். உங்களைப்பற்றி யாரிடமாவது சொல்ல வேண்டி வந்தால், "என் கம்ப ராமாயணத்தை எடுத்துக்கொண்டு போனார், இன்னும் திருப்பித் தரவில்லை, என் ஷேக்ஸ்பியரை எடுத்துக் கொண்டு போனார், இன்னும் திருப்பித் தரவில்லை" என்று பேசுவார்கள்.

இதைக் கேட்பவர்கள் மனதில் நீங்கள் எப்பொழுது பார்த்தாலும் ஷேக்ஷ்பியரும், கம்ப ராமாயணமும் வாசித்துக் கொண்டிருப்பதாகப்

படுமே யொழிய புஸ்தகம் இரவல் வாங்கிக் கொண்டு போய்த் திருப்பிக் கொடுக்காமல் இருப்பதாகப் படாது. இவர்களும் தாங்கள் போகும் இடங்களில் எல்லாம் உங்களைப் பற்றி மிக உயர்வாகவே பேசிக் கொண்டிருப்பார்கள். எல்லாரும் உங்களைப் பார்க்கும் போதெல்லாம் படித்தவர்கள் என்று சொல்வார்கள்.

படித்தவன் என்று காட்டிக்கொள்ள இன்னொரு நல்ல வழி இருக்கிறது. எப்பொழுது பார்த்தாலும் நீங்கள் படித்த புஸ்தகங்களிலிருந்து ஏதாவது இரண்டு வரி ஒப்பித்துக் கொண்டிருப்பதுதான் தான் இந்த வழி.

சில பேர் இருக்கிறார்கள். இவர்கள் எப்பொழுது பார்த்தாலும் தாங்கள் வெளியூர் சென்றுள்ள பெருமையை அவ்வப்பொழுது சமயம் நேர்ந்த போதெல்லாம் எடுத்துக் காட்டிக் கொண்டிருப்பார்கள்.

இவர் டில்லிக்குப் போயிருக்கிறார் என்று வைத்துக் கொள்ளுங்கள். சமயம் நேர்ந்த போதெல்லாம் தாம் டில்லிக்குப் போயிருக்கிற விஷயத்தை வலியுறுத்திக் கொண்டே யிருப்பார். சமயம், சந்தர்ப்பம் எல்லாம் இவருக்குக் கிடையாது. எல்லா சமயமும் இவருக்கு நல்ல சமயம்தான். எல்லா சந்தர்ப்பமும் இவருக்கு நல்ல சந்தர்ப்பம் தான்.

காலையில் காப்பி ஹோட்டலில் நுழைகிறாரா? சரி, இதைப் போன்ற வேறு நல்ல சமயம் எங்கே

கிடைக்கப் போகிறது? காப்பியை ருசி பார்க்கிறார். உடனே விளக்கெண்ணெய் குடித்தவன் போல் முகத்தை வைத்துக் கொள்வார். "என்ன காப்பி ஸார் இது? டில்லியில் இந்தியா கபேயில் குடிக்கணும் காப்பி!" என்பார். பக்கத்தில் இருப்பவர்கள் எல்லாம் இவர் டில்லிக்குப் போயிருக்கிற விஷயத்தை தெரிந்து கொண்டு, இவரிடம் சற்று பய பக்தி யுடனேயே நடந்து கொள்வார்கள். அடுத்த தடவை, 'ஸர்வ'ரும், சற்று நல்ல காப்பியாகவே கொண்டு வந்து தருவான் என்று வைத்துக் கொள்ளுங்களேன்!

காப்பி சாப்பிட்டு விட்டு எங்கேயாவது போவதற்காக ஜட்கா வண்டியில் ஏற வேண்டி யிருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள்! ஜட்கா வண்டியைப் பார்த்ததும். "என்ன ஜட்கா வண்டி ஸார்! எவன் ஸார் கண்டு பிடித்தான் இந்த வண்டியை! டில்லியில், டாங்காவில் போகணும் ஸார், எங்கேயாவது போகவேண்டும் என்றால்?" என்று டில்லி பிரதாபத்தை ஆரம்பித்து விடுவார்.

"எத்தவத்தை செய்தாலும், ஏதவத்தை பட்டாலும், முத்தர் மனம் இருக்கும் மோனத்தே" என்று சொல்வார்களே, அதைப் போல, இவர்கள் எங்கு சென்றாலும் சரி, என்ன காரியம் செய்தாலும் சரி, டில்லி பிரதாபத்தைப் பற்றி ஒரு படலம் வாசிக்காமல் இருக்க மாட்டார்கள். (இதில் என் சாமர்த்தியத்தைக் கவனித்தீர்களா? நான் டில்லிக்குப்

போயிருக்கும் விஷயத்தை எவ்வளவு அழகாக எடுத்துச் சொல்லி யிருக்கிறேன், கவனியுங்கள்.)

இதைப் போலவே, நீங்கள் எங்கு சென்றாலும் சரி, என்ன காரியம் செய்தாலும் சரி, படித்தவர்கள் என்று காட்டிக் கொள்ள ஏதாவது நாலு புஸ்தகத்தி லிருந்து நான்கு மேற் கோள்கள் எடுத்துச் சொல் லிக் கொண்டிருக்க வேண்டும்.

இதற்கு மிகவும் படித்திருக்க வேண்டும் என்கிற அவசியம் இல்லை. ஏதாவது நாலு வாக்கி யத்தைப் பொட்டை நிட்டுரு அடித்து வைத்துக் கொண்டு, அது சந்தர்ப்பத்துக்குப் பொருத்தமோ, இல்லையோ, 'தடலடி' அடித்துக் கொண்டிருந்தால் போதும். கேட்கிறவர்கள் அந்த வாக்கியத்தைக் கண்டு பிரமித்துப் போவார்களே யொழிய, அது சந்தர்ப்பத்துக்குப் பொருத்தமா, இல்லையா என் பதைக் கவனிக்க மாட்டார்கள்.

என் நண்பர் ஒருவர் இருக்கிறார். மூன்றாவது பாரம் கூட பாஸ் பண்ண வில்லை. ஆனால் எப் பொழுது பார்த்தாலும், எதற் கெடுத்தாலும் "ஷேக் ஸ்பியர் சொன்னானே அது மாதிரி" என்று ஷேக் ஸ்பியர் ஒப்பிக்க ஆரம்பித்து விடுவார். நான் கூட முதலில் இதைக் கண்டு திகைத்து விட்டேன். ஷேக் ஸ்பியரை, கல்லூரியில் கட்டாயப் பாடமாகப் படித்த நமக்குக் கூட இப்படி மேற்கோள்கள் எடுத்துக் காட்டத் தெரியவில்லையே என்று நான் வருத்தப் பட்டதுண்டு.

ஆனல் கடைசியில் தான் மர்மம் வெளிப் பட்டது. அவர் ஷேக்ஸ்பியரின் நாடகம் ஒன்றைக் கூட முழுவதும் படித்தவரில்லை. யாரோ, பொறுக் கிக் கொடுத்த ஒரு பத்து இடங்களை நிட்டுருப் பண்ணி வைத்துக்கொண்டு ஜமாய்த்துக் கொண் டிருந்தார்.

இப்படிச் செய்வதால் நம் குட்டு வெளிப்பட்டு விடாதா என்று நினைத்து விடாதீர்கள். திருப்பதி யில் மொட்டைத் தலையனைக் கண்டாயா என்பது போல், கிட்டத் தட்ட எல்லார் குட்டுமே இப்படி இருக்கும்போது உங்கள் குட்டு மாத்திரம் எப்படி வெளிப்படும் ?

இந்தக் காலத்தில், பாரதி, கம்பர், வள்ளுவர் என்று இவர்களை மேற்கோள்களாக எடுத்துக் காட்டும் அநேக பெரியவர்கள் இந்த ஆசிரியர்களின் முழுப் புஸ்தகத்தைப் பார்த்திருக்கிறார்களா என்பது சந்தேகந் தான். பள்ளிக்கூட நாட்களில் செய்யுள் திரட்டு என்று இதிலே இரண்டு, அதிலே இரண்டு என்று பொறுக்கிப் போடுகிறார்களே, அதை மாத் திரம் வாசித்து விட்டு, இவர்கள் கம்பனையும், பாரதி யையும், வள்ளுவனையும் கரைத்துக் குடித்து விட்ட வர்கள் போல் பேசுவார்கள். பிழைக்கத் தெரிந்த வர்கள் இப்படித் தான் இருப்பார்கள்.

சிலர் இவர்களை விட நன்கு பிழைக்கத் தெரிந் தவர்கள். இந்தத் தகராறு கூட வைத்துக் கொள்ள மாட்டார்கள். “கம்பன் சொன்னனே அது

மாதிரின்னு இருக்கு" "வள்ளுவன் சொன்னனே அது மாதிரின்னு இருக்கு" என்று சொல்லிக் கொண்டிருப்பார்கள். கம்பன் என்ன சொன்னன் என்று இவர்களும் சொல்லுவதில்லை, மற்றவர்களும் கேட்பதில்லை.

ஆகவே, பிழைக்க விரும்புகிறவர்கள் மேற் சொன்ன வழிகளில் தாங்கள் மெத்தப் படித்தவர்கள் என்று காட்டிக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.

---

## சகஸ்ரநாம அர்ச்சனை

சகஸ்ரநாம அர்ச்சனை யென்றால் ஜனங்களுக்கு என்னவென்று தெரியுமா என்றே எனக்குச் சந்தேகமாய் இருக்கிறது. ஏனெனில் இந்த வார்த்தையை ஜனங்கள் தவறுதலான அர்த்தத்தில் உபயோகித்து உபயோகித்து, இதன் நிஜ அர்த்தம் மங்கி விட்டது.

சாதாரணமாக, தற்காலக் கட்டுரைகளிலும், கதைகளிலும் பின் கண்ட வாசகத்தைக் காண்கிறோம்.

"புருஷன் காய்கறி வாங்கிக் கொண்டு வீடு திரும்பினான். மனைவிக்கு முன்னர் அவன் கறி காய் பையைத் தலை குப்புறக் கவிழ்த்ததும், மனைவியின் முகத்தில் எள்ளும், கொள்ளும் வெடித்தது. உடனே அவள் புருஷனை **சகஸ்ரநாம அர்ச்சனை** செய்யத் தொடங்கினாள்."

இங்கே சகஸ்ரநாம அர்ச்சனை என்பதற்கு 'கன்னா பின்னா வென்று ஏசுதல்' என்றுதான் அர்த்தம். கிட்டத்தட்ட இந்த அர்த்தத்தில் தான் தற்காலத்தில் இச் சொற்றொடர் உபயோகப் பட்டு வருகிறது.

இந்த வார்த்தைகளின் அர்த்தம் இப்படி மாறிப் போனதைப் பற்றி நான் வெகுவாக வருத்

தப் படுவது உண்டு. இதன் காரணமாக இந்த வார்த்தைகளை இந்த அர்த்தத்தில் கையாளும் எழுத்தாளர்களின் மீது எனக்குக் கோபம் கூட உண்டாவது உண்டு. மனைவி புருஷனை ஏசினுள் என்றால் இன்னென்ன வார்த்தைகளை இன்னென்ன மாதிரி உபயோகித்து ஏசினுள் என்று சொல்லித் தொலைக்கக் கூடாதா, இப்படியா இந்த இந்த அழகிய வார்த்தைகளின் அர்த்தத்தைக் குட்டிச் சுவராக அடிப்பது என்று நினைப்பேன்.

ஆனல் நிதானமாக யோசித்துப் பார்க்கும் போது எனக்கு அந்த எழுத்தாளர் மீது உள்ள கோபம் எல்லாம் பறந்து போய், அவர் மீது பச்சாத்தாபமே உண்டாகும். புருஷ வர்க்கத்தைச் சேர்ந்த அந்த எழுத்தாளர், ஸ்திரீ வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவர் புருஷ வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவரை அவமானப் படுத்தியதை விஸ்தாரமாக விவரிக்காமல் இந்த முறையில் ரத்தினச் சுருக்கமாக எடுத்துச் சொன்னது சரிதான் என்று படும்.

எப்படியோ இந்த சொற்றொடரின் அர்த்தம் மாறி விட்டது. ஆகவே இதன் மூல அர்த்தம் என்ன வென்று எடுத்துச் சொன்னல் தான் ஜனங்களுக்குத் தெரியும். மூல அர்த்தம் என்ன வென்றால் பகவானை 1008 நாமங்கள் கொண்டு துதித்தல் என்பது.

பகவானுக்கு ஆயிரத் தெட்டு நாமங்கள் வருவானேன் என்று சிலர் கேட்கலாம். இதில் தான்

இருக்கிறது சூட்சுமம். நம் முன்னோர்கள் இந்த ஆயிரத்தெட்டு நாமங்கள் எப்படிக் கண்டு பிடித்தார்கள் என்ற சூட்சுமத்தைத் தெரிந்துகொண்டு விட்டீர்களானால், ஆயிரத்தெட்டு அல்ல, லட்சத்தெட்டு நாமங்கள் நீங்களே சிருஷ்டித்து விடுவீர்கள்.

இந்த நாமங்களின் கருத்தை ஆராய்ந்து பார்த்தால் இது விஷயம் உங்களுக்கு நன்கு விளங்கும். "மணலைக் கயிறாகத் திரித்தவனே, வானத்தை வில்லாக வளைத்தவனே, மலையை அம்பாகத் தொடுத்தவனே" என்று இந்த ரீதியில் அத்தனை நாமங்களும் புகழ்ச்சி யுரையாகவே இருக்கும். பகவானிடமிருந்து காரியம் சாதித்துக் கொள்வதற்கு நம் முன்னோர் கண்டு பிடித்து வைத்துள்ள வழி இது. பகவான் கூட முகஸ்துதிக்கு வசப்படுகிறார் என்பது நம் பெரியவர்களின் கருத்து.

பகவான் இப்படி முகஸ்துதிக்கு வசப்படுகிறார் என்றால், சாதாரண மக்கள் எவ்வளவு தூரம் வசப்படுவார்கள் என்பதைச் சொல்லவா வேண்டும்? ஆகவே பிழைக்க விரும்புகிறவர்களுக்கு பிறரிடமிருந்து ஏதாவது காரியம் ஆகவேண்டி யிருந்தால், அவர்களை சகஸ்ரநாம அர்ச்சனை பண்ணத் தெரிந்திருக்க வேண்டும்.

இது விஷயத்தில் தற்கால யுவர்கள் மிகவும் அசடுகள் என்றே சொல்ல வேண்டும். யாராவது ஒருவரைக் கண்டால் அவரிடமிருந்து காரியம் சாதித்துக் கொள்ளும் வழி இவர்களுக்குத் தெரிவதே யில்லை.

நேரே போவார்கள். "ஸார்! இன்ன காரியமாக நான் வந்திருக்கிறேன். முடியுமா, முடியாதா?" என்று டக், டக்கென்று கேட்பார்கள். எங்கேயோ ரயில் வண்டியைப் பிடிக்கப் போகிறவர்கள் போல் இப்படி கன அவசரமாகக் காரியத்தை முடிக்க விரும்புகிறவர்களைக் கண்டால் யாருக்குத் தான் பிடிக்கும்? ஆகவே 'ஸார்' காரியம் செய்து கொடுக்காமல் இவர்களை வெறும் கையாக அனுப்பி விடுவதில் ஆச்சரியம் இல்லை.

ஆனல் காரியம் ஆகவேண்டுமானல் "ஸாரை"ப் போய் பார்க்க வேண்டிய விதமே வேறு. போனதும், போகாததுமாக நாம் காரியத்தைச் சொல்லக் கூடாது. "ஆங்கிலேயர்கள் நம்மைப் போல் காலஹரணம் செய்ய மாட்டார்கள், போனதும் போகாததுமாகக் காரியத்தைச் சொல்வார்கள்" என்று பள்ளிக் கூடத்தில் சொல்லிக் கொடுத்ததெல்லாம் ஏட்டுச் சுரைக்காய். கறிக்கு உதவாது. ஞாபகம் இருக்கட்டும்!

ஆகவே "ஸாரை"ப் போய்ப் பார்த்து பேச ஆரம்பித்ததும் சகஸ்ரநாம அர்ச்சனையை ஆரம்பித்து வைக்க வேண்டும். 'ஸார்' சமீபத்தில் செய்த ஏதாவது ஒரு காரியத்தைப் பற்றிப் பேச்செடுத்து, அதை வானளாவப் புகழ வேண்டும். "என்ன போங்கள்! உங்கள் சாமர்த்தியமே சாமர்த்தியம்! உங்கள் கெட்டிக்காரத் தனமே கெட்டிக்காரத் தனம்!" என்று இந்த ரீதியில் ஸாரைப் பற்றியே பேசிக் கொண்டு போக வேண்டும்.

இதனால் ஸாருக்கு மிகவும் உச்சி குளிர்ந்து விடும் என்பதில் சந்தேகமில்லை. தமக்கு ஏற்படும் சந்தோஷத்தில் நீங்கள் போன காரியம் என்னவென்று விசாரிக்க ஆரம்பித்தாலும் ஆரம்பிப்பார்.

ஆனால் நீங்கள் உங்கள் காரியத்தை உடனே சொல்லிவிடக் கூடாது. 'ஸாரி'ன் கீர்த்தி, பிரதாபம் ஏதாவது வேறு ஒன்றை எடுத்து விட வேண்டும். இம்மாதிரி ஒரு மணி நேரம் அவரை சகஸ்ரநாம அர்ச்சனை செய்த பிறகு, "சரி, நான் போய்விட்டு வருகிறேன்" என்று புறப்பட வேண்டும்.

அந்த சமயம் ஸாருக்கு உங்களைப்பற்றி ஏற்பட்டிருக்கும் மதிப்பும், நல்லபிப்பிராயமும் சொல்லி முடியாது. "ஆஹா! இவரன்றோ நல்ல மனுஷர்! இவரன்றோ சத்திய சந்தர்! சிலரைப்போல் அசிகை சிறிதும் கொள்ளாமல் நம்மைப் புகழ்ந்தாரே! அத்தனைக்கும் நாம் இதுவரை இவருக்கு ஒரு உபகாரம் கூடச் செய்ததே கிடையாதே! தனக்கு என்ன வேண்டும் என்று கூடச் சொல்லாமல் போய் விட்டாரே!" என்று ஸார் உங்களைப்பற்றி நினைத்துக் கொண்டிருப்பார். இந்த சமயம் நீங்கள் அவர் உயிரையே கேட்டாலும் அவர் கொடுக்கத் தயாராய் இருப்பார். ஆகவே ஸாரிடமிருந்து உத்தரவு வாங்கிக்கொண்டு சென்ற தாங்கள் பத்தடி சென்றதும் திரும்பி வரவேண்டும். உங்களுக்கு அவரால் ஆகவேண்டிய காரியத்தைச் சொல்ல

வேண்டும். "ஓ! இவ்வளவுதானா! செய்து தரு கிறேன்" என்பார். உங்கள் காரியமும் ஆகிவிடும்.

காரியம் ஆகிறதற்காக இப்படி சகஸ்ரநாம அர்ச்சனை செய்தார் என்று 'ஸார்' நினைத்துக் கொள்ள மாட்டாரா என்று கேட்கலாம். ஒருக் காலும் நினைத்துக்கொள்ள மாட்டார். முகஸ் துதிக்கே அப்படியே ஆளை மயக்கும் ஒரு தனி சக்தி இருக்கிறது.

முகஸ்துதியைப்பற்றி இத்தனை தெரிந்து வைத் துக் கொண்டிருக்கிறேனே யொழிய, நானே எத் தனையோ தடவைகளில் முகஸ்துதியின் மோகினி வலையில் அகப்பட்டு ஏமாந்திருக்கிறேன்.

என்னால் காரியம் ஆகவேண்டி யிருந்த எத் தனையோ பேர் என் கட்டுரைகளை வானளாவப் புகழ்ந்திருக்கின்றனர். உலகத்திலேயே இத் தகைய கட்டுரைகள் இதுவரை வெளிவந்ததுமில்லை, இனிமேல் வெளிவரப் போவதுமில்லை என்று வாய்ப் பந்தல் போட்டிருக்கின்றனர். அப்பொழு தெல்லாம் எனக்கு ஏற்படும் ஆனந்தம் சொல்லி முடியாது. அந்த ஆனந்தத்தில் நான் அவர்களுக்கு வேண்டிய காரியத்தை யெல்லாம் செய்து கொடுத் திருக்கிறேன்.

அவர்கள் கேட்ட பணத்தைக் கடனாகக் கொடுத்தேன். அப்பொழுது கடன் என்று நினைத்துக் கொண்டு தான் கொடுத்தேன். ஆனால் அவர்கள் இன்னும் திருப்பிக் கொடுக்காததிலிருந்து

அவர்கள் நான் தானமாகக் கொடுத்ததாகவே கொண்டு விட்டார்கள் என்று தோன்றுகிறது. இப்படி யெல்லாம் அவர்கள் என்னை ஏமாற்றியிருக் கிறார்கள். ஆனால் அந்த சமயம் எனக்கு அவர்கள் ஏமாற்றுவதாகவே தெரியவில்லை.

வெகு தூரம் போவானேன்? என் மாமனாரே என்னை அப்படி ஏமாற்றி விட்டார்! அவர் என் கட்டுரைகளை வெகுவாக சிலாகிக்கப் போக, நான் சரசுவை வரதட்சிணை இல்லாமலேயே கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டேன்! இப்பொழுது காலம் இருக்கும் நிலைமையைப் பார்க்கும்போது, இப்படி ஏமாந்து போய் விட்டோமே, வரதட்சிணை வாங்கியிருக்கலாமே என்று தோன்றுகிறது.

சகஸ்ரநாம அர்ச்சனை செய்யும்போது உண் மையைத் தான் சொல்ல வேண்டும் என்கிற அவ சியம் இல்லை. உண்மை பொய் இரண்டையும் கலந்து சொல்லலாம். பரவா யில்லை.

இது விஷயத்தைப் பழைய காலத்துப் புலவர்கள் வெகு நன்கு தெரிந்து வைத்திருந் தார்கள் என்று தெரிகிறது. பழங்காலத்துப் புலவர்கள் பாடியுள்ள பாட்டுகளே இதற்குச் சான் றாகும்.

---

## பிரித்து ஆளு.

**வா**சகர்களே! நான் இதுவரை சொல்லி வந்துள்ள விதிகளைக் கையாண்டீர்களானல் நீங்கள் வெகு சீக்கிரம் முன்னுக்கு வந்து விடுவீர்கள் என்பதில் சந்தேக மில்லை. சீக்கிரமே நீங்கள் ஒரு பெரிய காரியாலயத்தின், அல்லது இலாகாவின் தலைவராக வந்துவிடலாம். அப்பொழுது உங்களுக்குக் கீழே வேலை செய்கிறவர்களை நடத்த வேண்டிய விதம் எப்படி என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டியது மிகவும் அவசியம்.

ஒரு காரியாலயத்தின் தலைவர் தம் சிப்பந்திகளை எப்படி நடத்த வேண்டும் என்பதற்கு வெகு நல்ல உதாரணம் வேண்டுமானல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைத் தவிர வேறு நல்ல உதாரணம் கிடைக்க முடியாது. தான் ஆட்சி செலுத்தும் நாடுகளில் உள்ள மக்களைப் பிரித்தாள்வதே பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வெற்றியின் ரகசியம் என்பது உலகம் அறிந்த விஷயம்.

ஆகவே உங்கள் காரியாலயத்தில் உள்ள சிப்பந்திகள் உங்களுக்குப் பயந்து நடக்க வேண்டுமானல் நீங்கள் அவர்களைப் பிரித்தாள வேண்டும். அதாவது ஒருவருக் கொருவர் ஆகவொட்டாமல் அடிக்க வேண்டும். மானேஜரைக் கண்டால் அக்கௌண்டன்டுக்கு ஆகக் கூடாது. அக்கௌண்

டன்டைக் கண்டால் வெட்டிக் கொல்ல வேண்டும் போல் காஷியருக்கு இருக்க வேண்டும். காஷியரைக் கண்டால் குமாஸ்தாக்கள் சீறி விழ வேண்டும். காரியாலயத்தில் உள்ள எல்லாரும் ஒன்று சேர விட்டீர்களோ, உங்களுக்கு வந்தது ஆபத்து! இத்தனை பிழைக்கும் வழிகளும் தெரிந்து நீங்கள் முன்னுக்கு வந்தது வியர்த்தமாய்ப் போய் விடும்!

காரியாலயத்தில் உள்ள எல்லாரும் ஒன்று சேர்ந்து ஐக்யமாக வேலை செய்வதனால், காரியாலயம் நாளுக்கு நாள் முன்னேறிக் கொண்டே வரும், லாபமும் அதிகரிக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் காரியாலயம் லாபம் அடைவதால் நீங்கள் லாபம் அடைந்து விட்டதாக எண்ண வேண்டவே வேண்டாம்.

ஏனெனில் சிப்பந்திகளின் ஐக்யம் அதிகரிக்க, அதிகரிக்க அவர்கள் உங்களிடம் பயப்படுவதை விட்டு விடுவார்கள். பயப்படுவதற்குப் பதில் உங்களிடம் அன்பும், ஆதரவும் காட்ட ஆரம்பிப்பார்கள் என்பது உண்மை தான். ஆனால் அன்பையும், ஆதரவையும் இந்தக் காலத்தில் யார் நாடுகிறார்கள்! இதில் என்ன ஆனந்தம் இருக்கிறது? நம் சிப்பந்திகள் நம்மைக் கண்டால் சிம்ம சொப்பனம் கண்டது போல் நடுங்குவதில் உள்ள ஆனந்தம் வேறு எதிலும் இல்லை.

ஆகவே சிப்பந்திகள் ஒன்று சேர விட்டு விடாதீர்கள். இதனால் காரியாலயத்துக்கு லாபம் அதிகம் கிடைக்குமென்றாலும், இந்த லாபத்தை

நீங்கள் சிப்பந்திகளுடன் பகிர்ந்து கொள்ள வேண்டி வரும். கடைசியில் உங்களுக்கு மிஞ்சும் லாபம் ஒன்ருகத் தான் இருக்கும். ஆகவே நீங்கள் பிழைக்கும் வழிகளைக் கடைப் பிடித்து, முன்னுக்கு வந்து, ஒரு காரியாலயத்துக்குச் சொந்தக்காரர் ஆனவுடன், உங்கள் சிப்பந்திகளை ஒன்று சேரவிட்டு விடாதீர்கள்.

சிப்பந்திகள் ஒன்று சேராமல் இருப்பதற்குப் பின் கண்ட வழிகளைக் கையாளலாம்.

முதலாவதாக உங்கள் சிப்பந்திகள் ஒருவரைப் பற்றி யொருவர் கோள் சொல்லும் வழக்கத்தை நீங்கள் வெகுவாக ஆதரிக்க வேண்டும். பியூனைப் பற்றி அக்கௌண்டன்ட் கோள் சொன்னுலும் சரி, அக்கௌண்டன்டைப்பற்றி பியூன் கோள் சொன்னுலும் சரி, நீங்கள் எல்லாவற்றையும் காதில் போட்டுக் கொள்ள வேண்டும்.

நீங்கள் கோள் சொல்வதைச் செவி சாய்த்து கேட்கிறீர்கள் என்று தெரிந்தால் எல்லாரும் ஒருவரைப் பற்றி ஒருவர் கோள் சொல்ல உங்களிடம் வருவார்கள். இதனுல் காரியாலயத்தில் உள்ள எல்லாரும் எங்கே எஜமானனிடம் தங்களைப்பற்றிக் கோள் போய் விடப் போகிறதோ என்று ஒருவரைக் கண்டு ஒருவர் நடுங்கிக் கொண்டு ஆபீஸ் வேலையைச் சரியாகச் செய்வார்கள்.

இதனுல் நீங்கள் தினம் ஆபீசுக்குப் போய் அவர்களைக் கவனிக்கவேண்டும் என்கிற அவசியம் கூட இல்லை. நீங்கள் மாட்டில் நிம்மதியாக சீட்டாடு

வதிலோ, அல்லது குதிரைப் பந்தயத்துக்குச் செல்வதிலோ உங்கள் வாழ் நாட்களைக் கழிக்கலாம்.

இரண்டாவதாக நீங்கள் செய்ய வேண்டிய விஷயம், சம்பள உயர்வுக்கென்று ஒரு தனித் தேதி குறிப்பிட்டு, சம்பளத்தை உயர்த்தக்கூடாது. நீங்கள் பாட்டில் ஒரு வருஷம் இரண்டு தடவை சம்பள உயர்வு கொடுக்க வேண்டும், பிறகு ஒரு ஐந்து வருஷம் ஒன்றுமே கொடுக்கவே கூடாது. இம் மாதிரிக் கன்னாபின்னவென்று கொடுக்க வேண்டும். இதனால் நீங்கள் எப்பொழுது சம்பள உயர்வு கொடுப்பீர்கள், அல்லது மாட்டீர்கள் என்ற நிதானமே சிப்பந்திகளுக்கு ஏற்படாது. ஆகவே எந்த நிமிஷத்திலும் நீங்கள் சம்பள உயர்வு கொடுக்கலாம் என்று பயந்து கொண்டு, சிப்பந்திகள் எப்பொழுது பார்த்தாலும் பயந்து கொண்டே, தங்கள் வேலையைச் சரிவரச் செய்து கொண்டிருப்பார்கள்.

சிப்பந்திகளுக்குள் பூசல் மூட்டி விடுவதில் இந்தச் சம்பள உயர்வு கொடுப்பதை விடச் சிறந்த சாதனம் வேறு ஒன்றும் கிடையாது. வேண்டுமென்றே நன்கு வேலை செய்கிறவர்களுக்குக் குறைந்த சம்பள உயர்வு கொடுங்கள், சரியாக வேலை செய்யாதவர்களுக்கு நிறையக் கொடுங்கள். இதனால் இவர்களுக் கிடையில் மனக்கசப்பு ஏற்படும். உங்கள் அதிகாரம் பலப்படும்.

சில அசட்டு முதலாளிகள் இருக்கிறார்கள். வருஷத்துக்குப் பத்து ரூபாய் வீதம் சம்பளத்தை

உயர்த்துவது என்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இப்படி வருஷா, வருஷம் பத்து ரூபாய் உயர்த்திக் கொண்டு போவதை விட, ஒரு வருஷம் ரூ. 5 கொடுத்து விட்டு, நான்கு வருஷங்கள் கழித்துச் சடாரென்று ரூ. 45 கொடுப்பதில் எத்தனையோ அனுகூலம் இருக்கிறது.

இதில் உங்களுக்குப் பணத்துக்குப் பணம் மிச்சமாவதோடு கூட அதிகாரத்துக்கு அதிகாரமும் உயரும். நடுவாந்தரத்தில் சம்பள உயர்வு கொடுக்காததால் அந்தப் பணம் எல்லாம் உங்களுக்கு லாபம். அதோடு திடீரென்று ரூ. 45 கொடுத்தார் என்று சிப்பந்திகள் உங்களிடம் பயந்து கொண்டிருப்பார்களே யொழிய நடுவாந்தரத்தில் நீங்கள் அவர்களை ஏமாற்றியதை யெல்லாம் மறந்து விடுவார்கள். திடீரென்று நீங்கள் ரூ. 45 சம்பள உயர்வு கொடுத்தால், எந்த சமயத்திலும் நீங்கள் இதே மாதிரி பெரும் வாரியான தொகை கொடுக்கலாம் என்று நினைத்துக் கொண்டு, இதற்குப் பிறகு பத்து வருஷ காலமானாலும் உங்களிடம் பயந்து கொண்டு சம்பள உயர்வு கேட்காமல் வேலை செய்வார்கள்.

---

## முடிவு

ஆக, பிழைக்கும் வழி உங்களுக்குச் சொல்லிக் கொடுத்து விட்டேன். எல்லாரும் இதன்படி நடந்து பிழைத்துப் போங்கள்.

"என்னய்யா, ஊருக்கு உபதேசம் பண்ண வந்து விட்டீரே, தாங்களே இதன்படி நடந்து பிழைத்துக் கொள்வது தானே?" என்று நீங்கள் கேட்கலாம்.

"சொல்வது யார்க்கும் எளிது, கடிது சொல்லிய வண்ணம் செய்தல்" என்னும் பெரியவர்களின் வாக்கைத் தான் நான் சமாதானமாகக் கூற வேண்டும். அதோடு இந்தப் பிழைக்கும் வழி யெல்லாம் எனக்குச் சரிப்பட்டு வராது. என் பிழைக்கும் வழி யெல்லாம் எழுத்தில் தான் இருக்கிறது. ஏன், "**பிழைக்கும் வழி**" என்னும் இப்புஸ்தகத்தை நான் எழுதினதே ஒரு பிழைக்கும் வழி தானே!

---

## ஒரு பெண்மணி எழுதுகிறார்

ஐயா, நாடோடியாரே !

தாங்கள் எப்பொழுது பார்த்தாலும் பேனாவும் பேப்பரும் கிடைக்கிறது என்ற எண்ணத்தில் எங்களைப் போன்ற ஸ்திரீகளை அனாவசியமாகத் தாக்கு கிறீர்கள். தாங்கள் பொதுவாக ஸ்திரீகளை இழிவுபடுத்த வேண்டும் என்ற எண்ணமுடையவர் என்பது தங்கள் கட்டுரை மூலம் தெரியவருகிறது. அதுவும் தவிர தங்கள் மனைவியும், எங்கள் பெண்ணினத்தைச் சேர்ந்தவளுமான சரசுவையும் பாரு முதலியவர்களையும் பகிரங்கமாகத் தாக்குகிறீர்கள். தங்களிடமிருந்து ஸ்திரீகள் வர்க்கத்தையே கார்க்கவேண்டும் என்ற பரோபகார எண்ணத்தில் நான் தற்சமயம் கிளம்பியுள்ளேன்.

'ஒரு ரோமம் போனாலும் கவரிமான் வாழாது'. அதே போல சுடு சொல்லின் வெப்பம் பொறுக்க முடியாமல் கண்ணீர்விட்டு அந்தக் கண்ணீரில் நனைந்து குளிர்ச்சி அடையும் பெண்களினத்தை நீங்கள் தாழ்த்திப் பேசுவது எங்களுக்கு வருத்தமாக இருக்கிறது. ஆதலின் இக்கடிதம் எழுதலானேன் !

இங்கு பெண்ணினத்தைக் காப்பதன் நிமித்தம் ஒரு தொண்டர் படை நிறுவப்பட்டு இருக்கிறது. அதன் தலைவி நான்தான். எங்களிடம் இரகசிய ஆயுதங்கள் அதிகம் இருக்கின்றன.

காங்கிரஸ் மந்திரிசபை இருந்த சமயம் ஸ்ரீரங்கத்தில் டாக்டர் ராஜன் பிரவேசித்தபோது எங்கள் வர்க்கத்தை சேர்ந்த வீரமணிகள் சிலர் பிரயோகித்தார்களே அந்த ரகசியப் பொடி ஆயுதமும் எங்கள் கைவசம் இருக்கிறது. அதுவும் தவிர டிசம்பர் 30-ந்தேதி கல்கி இதழில் தாங்கள் எழுதியபடி வெள்ளையர்களை வெளியேற்ற எங்கள் குரல் பிரயோஜனப்படுமுன் அதைத் தங்களிடம் பிரயோகித்து தங்களை இந்துமகா சமுத்திரத்தில் தள்ளமுடியுமா என்று சோதனை செய்து பார்க்க முடிவு செய்திருக்கிறோம்.

அதுவும் தவிர எங்கள் தொண்டர் படை மற்றொரு ரகசிய ஆயுதம் வைத்திருக்கிறது. அது யாதெனில் "கண்ணீர்த் துளி."

இம்மூன்று பயங்கர ஆயுதங்களுடன் இன்னும் சிறிது நாட்களுக்குள் நாங்கள் பெண்ணினத்தைப் பாதுகாக்கும்

பொருட்டு தங்கள் காரியாலயத்தை நோக்கிப் படையெடுக்கப்போகிறோம். முதலில் எங்கள் "பொடி" ஆயுதத்தைப் பிரயோகிப்போம். அதிலேயே தாங்கள் தப்புவது கடினம். அப்படி தெய்வ பலத்தால் தப்பிவிட்டால் எங்கள் இரண்டாவது ஆயுதமாகிய எங்கள் குரல்களின் சப்த சக்தியை சலன சக்தியாக மாற்றி தங்கள்மீது பிரயோகிப்போம். இந்த ஆயுதத்திற்கு நீங்கள் நிச்சயம் தப்பவேமுடியாது. அப்படியும் தப்பிவிட்டால் எங்கள் பெண்ணினத்திற்கே உரியதானதும் மஹா பயங்கர ரகசிய ஆயுதமுமான கண்ணீர்த் துளிகளை எங்கள் படையைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் சேர்ந்து பொழிந்து தங்களையும் தங்கள் காரியாலத்தையும்—ஏன்? சென்னைமா நகரத்தையே மூழ்கடித்து விடுவதென்று நிச்சயித்திருக்கின்றோம்.

நாங்கள் ஆண்களைப்போல் திடீரென்று எதிரிகளைத் தாக்க ஆரம்பிப்பதில்லை. ஆதலின் எங்கள் எதிரியாகிய உங்களுக்கு இதைத் தெரியப்படுத்தி விட்டோம். தாங்கள் தங்கள் படைகளுடன் சித்தமாயிருக்கவும்.

இப்படிக்கு,
தங்கள் நடையை மாற்ற விரும்பும்

............

**N. B.**—எங்கள் ரகசிய ஆயுதங்களின் பெயரைக் கேட்டதுமே தங்கள் மனக்கண் முன் விண்ணுலகு தோன்றியிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆதலின் எங்களுடன் சமசரமாகப் போக விரும்புவீர். அவ்விதம் விரும்பினால் கீழ்க்கண்ட விலாசத்திற்கு சமாதான ஒப்பந்தத்தின் ஷரத்துக்களை அனுப்பவும்.

............

குணசீலம் போஸ்ட்
திருச்சி ஜில்லா.

---

# ஒரு நாள் கூத்து

**ஹிந்துஸ்தான் :**—இந்தத் தொகுப்பில் நாடோடி 'சோக சிகரம்' என்று ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். அதில் பல பேரைக் கொன்று தீர்த்திருக்கிறார். அந்தக் கொலைகளைப் பற்றிப் படிக்கையிலும் சிரிக்கத்தான் சிரிக்கிறோம். சிறந்த ஹாஸ்யத்துக்கு இதைவிடச் சிறப்பான உதாரணம் தேவையில்லை.

*

**ஹனுமான் :**—அவரது குழந்தை அனுவைப் பற்றித் தற்சமயம் தமிழ்நாட்டில் தெரிந்துகொள்ளாமல் இருப்பவர்கள் மிகவும் கொஞ்சமாகத் தானிருப்பார்கள். ஒன்றரை வயது நிரம்பாத அனு இதற்குள் பிரபலமடைந்துவிடவே அவளைப் பார்க்க ஆவலுறும் மக்களின் ஆசையைத் தீர்த்துவைக்க அவள் படத்தையும் பிரசுரித்து "ஒரு நாள் கூத்து" என்னும் இந்த ஹாஸ்யக் கதம்பத்தின் மூலம் அறிமுகம் செய்து வைக்கிறார் ஸ்ரீ நாடோடி.

*

**சக்தி :**—வாழ்க்கையின் அன்றாட நிகழ்ச்சிகளை நகைச் சுவையுடனும், அனுதாபத்துடனும் சித்தரிப்பதன் மூலம் சம்பந்தப்பட்டவர்களும் நம்மோடு சேர்ந்து சிரித்துத் திருந்தும்படி செய்துவிட முடியும். இதிலுள்ள 28 கட்டுரைகளும் இந்த முயற்சியில் வெகுவாக வெற்றி பெற்றுள்ளன என்றே சொல்லவேண்டும்.

*

**பிரசண்ட விகடன் :**—இந்தப் புத்தகத்தில் அடங்கியுள்ள நாடோடியின் சிருஷ்டிகளில் அநேகமாக எல்லாவற்றிலும் உயர்தரமான ஹாஸ்ய ரசத்தை அனுபவிக்கிறோம்.

*

**நவயுவன் :**—சோக சிகரம் என்ற கட்டுரையைப் படிக்கும்போது வாஸ்தவமாகவே விழுந்து விழுந்து சிரித்துவிடுகிறோம். இந்த ஹாஸ்யக் கட்டுரைக்கு எப்படிப்பட்ட தலைப்பு என்பதற்காகப் பிரத்தியேகமாக இன்னொரு தரமும் சிரிக்கிறோம்.

விலை ரூ. 3